# கட்டுரை விருந்து

சென்னைக் கிறித்தவக் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியரும்
சென்னை, அண்ணாமலைப் பல்கலைக்கழகங்களின்
தமிழ்க்கலைக்குழுவின் உறுப்பினரும் ஆகிய,

**பூ. ஆலாலசுந்தரஞ் செட்டியார், M. A.**

எழுதியது.

நான்காம் பதிப்பு

***1957***

---



[விலை ரூ. **2-4-0**

முதற் பதிப்பு : 1947
இரண்டாம் பதிப்பு : 1949
மூன்றாம் பதிப்பு : 1956
நான்காம் பதிப்பு : 1957

## உரிமையுரை

மன்னராம் அண்ணா மலைச்செட்டி யாரவர்கட்(கு)
என்னரும் நன்றி எடுத்தியம்ப—உன்னிப்
பரிவுடன் கட்டுரை என்னும் பனுவல்
உரிமைப் படுத்தினேன் ஓர்ந்து.

பு. ஆலாலசுந்தரன்.

இப்புத்தகம் கிடைக்கும் இடம் :

பு. ஆலாலசுந்தரன், M. A.
"சிவனகம்"
S/19, ஆசிரியர் குடியேற்றம், (Professors' Colony)
அகரம் தெரு, தாம்பரம்.

சாது அச்சுக்கூடம், இராயப்பேட்டை, சென்னை-14

## நான்காம் பதிப்பின் முன்னுரை

ஈப் பல்கலைக்கழகத் தேர்வுக்கு உரைநடைப் பாட புத்தகமாக அமைத்து எனக்கு ஊக்கம் அளித்த சென்னைப் பல்கலைக் கழகம், அண்ணாமலைப் பல்கலைக்கழகம், உஸ்மானியா பல்கலைக்கழகம் ஆகிய மூன்று பல்கலைக்கழகங்களின் தமிழ்க்கலைக்குழுவின் உறுப்பி னர்க்கும் இதனைச் செம்மையாக அச்சிட்டு உதவிய சாது அச்சகத்தி னருக்கும் எனது உளமார்ந்த நன்றியைச் செலுத்துகின்றேன். இத் தமிழ்ப்பணியில் என்னை ஈடுபடுத்திய அம்பலவாணரின் பொன்னார்ந்த திருவடிகளைப் போற்றுகின்றேன்.

“ சிவனகம் ”<br>தாம்பரம்<br>15–5–’57

ந. ஆலாலசுந்தரன்.

# மூன்றும் பதிப்பின் முகவுரை

இந்நூலின் இரண்டாம் பதிப்பு 1949-ஆம் ஆண்டு வெளி வந்தது ; ஆறு ஆண்டுகள் கழித்து இப்போது மூன்றும் பதிப்பு இறைவன் இன்னருளான் வெளிவருகின்றது. இந்நூலினைக் கல்லூரி இடைநிலை வகுப்புத் தேர்விற்கு (Intermediate Examination) உரைநடைப் புத்தகமாக வைத்து என்னை ஊக்குவித்த பல்வேறு பல்கலைக்கழகத் தமிழ்க்கலைக்குழுவின் உறுப்பினர்களுக்கும், இதனை விரைவில் அச்சிட்டு உதவிய சென்னை இராயப்பேட்டை சாது அச்சுக்கூடத்தின் உரிமையாளர்க்கும் எனது உளமார்ந்த நன்றி உரியதாகும். இத்தமிழ்த் தொண்டில் என்னை ஈடுபடச் செய்த அம்பலத்தாடும் கூத்தப்பெருமானின் மலர்சிலம்படி வாழ்த்தி

“சிவனகம்”
தாம்பரம்
22—1—’56

புரிப்பாக்கம். ஆலாலசுந்தரன்.

## இரண்டாம் பதிப்பின் முகவுரை

இந்நூல் முதற்பதிப்பு சர்வசித்து ஆண்டு ஆனித் திங்கள் 9-ம் நாள் திங்கட்கிழமை (23-6-1947)-ல் வெளிவந்தது. முதற் பதிப்பு முழுமையும் செலவாகிவிட்டதால் இவ்விரண்டாம் பதிப்பு, தற்போது வெளிவருகின்றது. இந்நூலினைக் கல்லூரி இடைநிலை வகுப்புத் தேர்வுக்கு (Intermediate Examination) உரைநடைப் பாடபுத்தகமாக அமைத்து எனக்கு ஊக்கம் அளித்த அண்ணாமலைப் பல்கலைக்கழகம், ஆந்திர பல்கலைக்கழகம், மைசூர்ப் பல்கலைக்கழகம், திருவாங்கூர்ப் பல்கலைக்கழகம் ஆகிய நான்கு பல்கலைக்கழகங்களின் தமிழ்க்கலைக்குழுவின் உறுப்பினர்களுக்கு எனது மனமார்ந்த நன்றியைச் செலுத்துகின்றேன். இதனை மிக்க விரைவில் அச்சிட்டுத்தந்த கபீர் அச்சுக்கூடத்தின் உரிமையாளர்க்கும் இது வெளிவருதற்குப் பல்லாற்றானும் துணைபுரிந்த எனது அரிய நண்பர்களுக்கும் எனது நன்றி உரியதாகும். என்னை இத் தொண்டில் ஈடுபடுத்திய எல்லாம் வல்ல இறைவனை இறைஞ்சுகின்றேன்.

"சிவனகம்"
தாம்பரம்
1-10-1949

ந. ஆலாலசுந்தரன்.

# முதற்பதிப்பின் பதிப்புரை

யான் இதுகாறும் எழுதியுள்ள பல கட்டுரைகளுள் பத்துக் கட்டுரைகளைத் தொகுத்து, 'கட்டுரை விருந்து' என்ற பெயருடன் வெளியிடுகின்றேன். இவற்றுள், இலக்கியமும் வாழ்க்கை முறையும்—அரசு', 'பழந்தமிழர் பண்பு', 'குண்டலகேசி', 'திருக்கோவையார்', 'சூளாமணி', 'ஆதிமந்தியார்' என்ற ஆறு கட்டுரைகள், அனைத்து இந்திய வானொலியின் சென்னை நிலையத்தில் என்னால் பேசப்பெற்றவை. இவைகளை யான் வெளியிடுதற்கு இசைவு அளித்த சென்னை வானொலி நிலையத்தார்க்கு எனது நன்றி உரியதாகும். 'ஒரு சிறு கதை' என்பது அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தின் பருவ வெளியீட்டிலும் (Annamalainagar Miscellany Nov. 1933), 'கவியுள்ளமும் கலைஞானமும்' என்பது மகாமகோபாத்தியாய பண்டிதமணி மு. கதிரேசச் செட்டியார் அவர்களது மணிவிழா மலரிலும், 'இலக்குவன் சீற்றம்' என்பது காஞ்சியில் வெளியிட்ட திரு. வி. கலியாணசுந்தர முதலியார் அவர்களது மணிவிழா மலரிலும் வெளிவந்தன. 'புறநானூறும் இலக்கியமும்' என்பது புறநானூற்று மாநாட்டில் ஆற்றிய சொற்பொழிவாகும்.

இந் நூலினை உரிமைப்படுத்துதற்கு உடன்பாடு அளித்த டாக்டர் இராஜா. சர். மு. அண்ணாமலைச் செட்டியார் அவர்களுக்கும், இந் நூலுக்கு அரிய மதிப்புரைகள் வழங்கிய எனது ஆசிரியர்களாகிய, மகாமகோபாத்தியாய பண்டிதமணி மு. கதிரேசச் செட்டியார் அவர்களுக்கும், தமிழ்ப் பேராசிரியர் நாவலர் S. சோமசுந்தர பாரதியார், M.A., B.L. அவர்களுக்கும், தமிழ்ப் பேராசிரியர், திருவாளர் R. P. சேதுப் பிள்ளை, B. A., B. L. அவர்களுக்கும், இந்நூலினை முதற்பதிப்பாக வெளியிடுதற்கு முன்வந்த எனது கெழுதகை

நண்பரும் ஊ. புஷ்பரத செட்டி அண்டு கம்பெனியின் உரிமையாளரு மாகிய திரு. ஊ. சரவணச் செட்டியார், B.A., B.L. அவர்களுக்கும் எனது மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

இந்நூல் விரைவில் வெளிவருவதற்கு ஊக்கம் அளித்த 'ஆயிர வைசியன்' ஆசிரியர் அன்பர், தி. தி. சொக்கலிங்கம் அவர்களுக்கும், இது அச்சாகும் காலத்தில் ஒப்பு நோக்குதல் முதலிய பணிபுரிந்து உதவியவர்களாகிய, எனது உறவினர் பண்டித வித்துவான் மி. பொன். இராமநாதஞ் செட்டியார் அவர்களுக்கும், எனது நண்பர், சைவத் திருவாளர். பூ. சமரபுரி முதலியார் அவர்களுக்கும் எனது நன்றி உரியதாகும்.

இத் தமிழ்த்தொண்டில் என்னை ஈடுபடச் செய்த தில்லையி லுள்ள எல்லையற்ற பரம்பொருளாகிய கூத்தப்பெருமானை எனது மனமொழி மெய்களான் இறைஞ்சுகின்றேன்.

"சிவனகம்"
தாம்பரம்
23-6-1947

பு. ஆலாலசுந்தரன்.

# மதிப்புரைகள்

சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ் ஆராய்ச்சித் துறைத் தலைவர்
**திருவாளர் R. P. சேதுப்பிள்ளை, பி. ஏ., பி. எல்.**
அவர்கள் எழுதியது.

'கட்டுரை விருந்து' என்னும் இலக்கிய உரைநடை நூலை அன்பர், திரு. ஆலாலசுந்தரனார் ஆக்கி அளித்துள்ளார். தமிழ்த் தாயின் அணிகலன்களுள் தொலைந்து போனதாகக் கருதப்படும் குண்டலகேசியின் சில கூறுகளைத் துலக்குகின்றார் இந்நூலாசிரியர்; ஒளி மழுங்கிய சூளாமணியின் அழகினை விளக்குகின்றார்; புறநானூற்றின் இலக்கியப் பண்புகளும், பழந்தமிழ்நாட்டு அரசியல் முறையும், பெண்மை நலமும், பிறவும் இந் நூலில் நன்கு எடுத்துரைக்கப்படுகின்றன. நல்ல தமிழ் நடையில், ஆராய்ச்சி முறையில் எழுதப்பட்டுள்ள 'கட்டுரை விருந்து' தமிழ்நாட்டார்க்கு நல் விருந்தாக அமையும் என்று நம்புகிறேன்.

திருநெல்வேலி
11–6–47

ரா. பி. சே.

---

AN APPRECIATION

BY

**Prof. S. Somasundara Bharathiar, M. A., B. L.,**
*Retired Professor of Tamil, Annamalai University.*

I had the pleasure of reading the anthology of select Tamil essays of Mr. P. Alalasundaram Chettiar, M.A., Tamil Lecturer in the Christian College, Tambaram. It is aptly entitled "Katturai Virunthu", a name which

means exactly what the essays really are (viz.) 'a feast of dissertations.' They reveal the author's wide reading of and close acquaintance with Tamil classics and standard English authors. They testify to his great scholarship, and easy command of a lucid and sweet language on the one hand, and to his ardent love for Tamil and fervent devotion for high ideals in life and literature on the other.

These essays are only a few fragrant flowers from the writer's literary garden. They exhibit his wide and cosmopolitan sympathies and versatile interests as much, as they illumine his informed mind and cultured outlook. They cover a wide range of human interests, and breathe a sweet and native simplicity and rare taste, fine concepts and chaste expression, in agreeable contrast with the prolific writing of most Tamil authors that slump the modern literary market.

As all the ten essays are as short as they are sweet for any to read and to enjoy, I desist from elaborating the points of merit in them severally and in detail. I commend them to all lovers of Tamil prose, and particularly to the academic authorities who care to recognise good standard prose writings for prescribing as Text Books for higher classes of students. I wish the author a long and growingly useful literary career as a writer and a teacher.

Pasumalai,
10—4—'47

S. S. BHARATI, M.A., B.L.,
*Retired Professor and Advocate.*

மகாமகோபாத்தியாய பண்டிதமணி

## மு. கதிரேசச் செட்டியார்

அவர்கள் எழுதியது.

சென்னைக் கிறித்தவக் கல்லூரித் தமிழாசிரியர் திரு. பூ. ஆலாலசுந்தரஞ் செட்டியார், M. A. அவர்கள் வெளியிட்ட 'கட்டுரை விருந்து' என்னும் புத்தகத்தைப் பார்த்தேன். இதன்கண் பத்துக் கட்டுரைகள் அடங்கியுள்ளன. இவற்றுள் பெரும்பாலன சென்னை வானொலி நிலயத்திற் பேசப்பட்டன. ஏனைய தனித்தனியாக அவ்வப்போது பிற வெளியீடுகளின் மூலமாகவும், கழகங்களிற் பேசப்பட்டும் வெளிப்படுத்தப்பட்டவை. இக் கட்டுரைகள், பயில்வார்க்குத் தமிழ் இலக்கியச் சுவைகளை ஊட்டி இன்புறுத்தும் இயல்பின ; விருந்து என்னும் பெயர்க்கு ஏற்ப மாணவர்க்கு நல் விருந்தாக மிளிர்வன ; ஆராய்ச்சி முறைபற்றியும் வரலாற்று முறைபற்றியும் பாடற் பொருள் நயம் பற்றியும் எழுந்த இக் கட்டுரைகள், தனித் தனியே சுருங்கிய அளவில் முடிந்திருப்பது பாராட்டத் தக்கது. நீண்ட நடைச்செலவில் சலிக்கும் இக்காலத்தவர்க்குச் சுருங்கிய நடைச்செலவிற் பயன்பெற அமைந்திருப்பது விரும்பத்தக்கதாகும். தெள்ளிய இனிய நடையில் எழுதப்பட்ட இக் கட்டுரை விருந்து பல்கலைக் கழகங்களில் நடுத்தர வகுப்பிற்கு (Inter) உரிய சிறப்புப் பாடபுத்தகம் (Detailed Text) ஆதற்குப் பெரிதும் ஏற்றதொன்று. இதனை எழுதிய ஆசிரியர் திரு. செட்டியார் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் தமிழில் M. A. பட்டம் பெற்றவர் ; கல்வியறிவொழுக்கங்களிற் பற்றுடையவர் ; சிறந்த சிவநெறிச் செல்வர் ; கடவுட் பக்தியில் பெரிதும் ஈடுபாடுடையவர் ; இளமைப் பருவத்தே அமைதியும் அறிவும் உடையராய்த் தமிழுக்கும் சைவத்துக்கும் தொண்டாற்றி

வருபவர். என் அன்புமிக்க அரிய நண்பராகிய இவர்கள் இந் நல் விருந்தைப் பல்கலைக் கழகங் கண்ட பெரு வள்ளல் ஆகிய செட்டி நாட்டு ராஜா சர். அண்ணாமலைச் செட்டியார் அவர்களுக்கு உரிமை ஆக்கியிருப்பது பெரிதும் பாராட்டத்தக்கது. விருந்து இட்டாரும் ஏற்றுக்கொண்டாரும் ஆகிய இருவர் தகுதியும், விருந்தின் சுவையும், தமிழ் உலகத்தவரை விரும்பி ஏற்றுக்கொள்ளச் செய்யும் என்னும் நம்பிக்கையுடையேன். இன்னமும் ஆலவாயெம் இறைவன் அருளினாலே பன்னரும் நலங்கள் குன்றா நூல் பல ஆக்கித் தமிழ் உலகிற்கு உபகரித்துப் புகழும் புண்ணியமும் எய்துமாறு, இந் நூலாசிரியராகிய திரு. செட்டியார்க்கு வாணாள் முதலிய நலங்கள் எல்லாவற்றையும் அருளிக் காக்கும் வண்ணம் ஆண்டவன் திருவடிகளை வேண்டுகின்றேன்.

மகிபாலன்பட்டி
12-4-1947

மு. கதிரேசன்.

# பொருளடக்கம்

# 1

# இலக்கியமும் வாழ்க்கைமுறையும்

## அரசு

ஒரு நாட்டு மக்களின் வாழ்க்கை முறையினை அடுத்தது காட்டும் பளிங்குபோல் எடுத்துக் காட்டுவது அந்நாட்டின் இலக்கியமே யாகும். தமிழ் இலக்கியத்தினின்று, தமிழர் நாகரிகம், தமிழ் மக்களின் வாழ்க்கை முறை, சமூகநிலை அரசியல்நிலை முதலிய இன்னோரன்ன பிற பொருள்களைப் பற்றி நன்கு அறியலாமெனினும் ஈண்டுப் பேசப்படும் பொருள், தமிழ் இலக்கியத்தினின்று தமிழ் நாட்டின் அரசு எவ்வாறு விளங்கியது என்பதையும் அவ்வரசின் துணையால் மக்கள் வாழ்க்கைமுறை எவ்வாறு பண்படுத்தப் பட்டது என்பதையும் ஆராய்வதாகும். இனி, சங்க இலக்கியமும் அதற்குப் பின்னர்த் தோன்றிய இலக்கியமும் அரசினைப் பற்றிக் கூறுவன யாவை என்பதைக் காண்போம்.

பழந்தமிழர், மன்னனைக் கடவுளோடு ஒப்பவைத்து எண்ணினர் என்பதற்குப் பல இலக்கியச் சான்றுகள் உள்ளன. தமிழ் மொழியில் இறைவன் என்ற சொல் கடவுளை யும் அரசனையும் குறிக்கும் ; அதுபோலவே கோயில் என்ற சொல் கடவுளர் உறையும் கோயிலையும் மன்னன் வதியும் அரண்மனையையும் குறிப்பதாகும். இறைவன் என்ற பெயர் அரசனுக்கு எம்முறையில் பொருத்தமுடைத்து என்பதை ஆராய்வோம். ‘ இறைமாட்சி ’ என்ற சொல்லுக்குப்பொருள் கூறப் போந்த பரிமேலழகர் ‘ இறை மாட்சியாவது அரசனு டைய நற்குண நற்செய்கைகள். உலக பாலர் உருவாய் நின்று

(உலகத்தைக் காக்கும் காப்புக் கடவுள்போல் வீற்றிருந்து) உலகத்தைக் காத்தலால் இறை என்றார்' என்பர். "திருவுடை மன்னரைக் காணில் திருமாலைக் கண்டேனே" என்ற திருவாய்மொழி ஈண்டு நோக்கத்தக்கது. தலைவி தன் தோழிக்குக் கூறுவதாகவுள்ள பொருநராற்றுப்படையின் ஈற்றிலுள்ள ஒரு வெண்பாவை நோக்குவோம்.

> அரிமா சுமந்த அமளிமே லானைத்
> திருமா வளவனெனத் தேறேன்—திருமார்பின்
> மானமால் என்றே தொழுதேன் தொழுதகைப்
> போனவா பெய்த வளை.

"தோழி! அரியணையின்மீது வீற்றிருந்த திருமாவளவன் என்ற கரிகாலனை யான் கண்டேன். யான் அவனை எளிய மனிதனாகக் கருதவில்லை. இலக்குமி வீற்றிருக்கும் திருமார்பையுடைய திருமாலே அவன் எனக் கருதி அவனை வணங்கினேன்" என்றாள் தலைவி.

மன்னர் புகழிற்கு மாயோன் புகழை உவமையாகக் கூறுதல், 'பூவைநிலை' என்ற புறத்துறையின்பாற்படும் என்பர் தொல்காப்பியர்.

> "முறைசெய்து காப்பாற்று மன்னவன் மக்கட்கு
> இறையென்று வைக்கப் படும்"

என்பது பொய்யாமொழியன்றோ! மன்னன் மன்னுயிர்க்கு உயிர் போன்றவன் என்ற கருத்தில் மோசிகீரனார் என்ற சங்கப் புலவர்,

> "நெல்லும் உயிரன்றே நீரும் உயிரன்றே
> மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம்" (புறம்—186)

என்றார். தேவரினும் மன்னர் சிறந்தவர் என்பர் திருத்தக்க தேவர். தேவர் ஒருவனுக்கு இப்பிறவியில் நன்மையோ தீமையோ செய்ய எண்ணினால் அதனை உடனே செய்ய

இயலாது. ஆனால் மன்னன், ஒருவனுக்கு நன்மையோ தீமையோ செய்ய நினைப்பின் அதனை உடனே செய்து முடிக்க வல்லவனாகின்றான்.

" அருளு மேலா சாக்குமன் காயுமேல்
வெருளச் சுட்டிடும் வேந்தேனு மாதெய்வம்
மருளி மற்றவை வாழ்த்தினும் வையினும்
அருளி யாக்க லழித்தலங் காபவோ ?"(சிந்தாமணி—247)

என்ற திருத்தக்கதேவரின் திருவாக்கிற்கு இலக்காக 'அரசன் அன்று சாதிக்கும் தெய்வம் நின்று சாதிக்கும்' என்பது பெறப்படுகின்றது.

அரசபதவி என்பது இத்துணைச் சிறப்புடையதேனும் மிகப் பொறுப்பு வாய்ந்ததாகும். இதனாலன்றோ அரசாட்சி யானது அரசபாரம் என்றே வழங்கப்படுகின்றது. "Uneasy lies the head that wears the crown" என்ற ஆங்கில அறவுரையினைத் தமிழ் மன்னர் நன்கு உணர்ந்தனர் என்பதற்கு இலக்கியச் சான்றுகள் பல உள்ளன. மழை பெய்யாதிருக்கும்போதும் உயிர்கள் துன்பம் அடையும்போதும் மன்னனுக்குக் கவலை உண்டாகும். எனவே அரச குடியிற் பிறந்து அரசாள்வது துன்பமே ஒழிய அதில் சிறப்பில்லை என்ற கருத்தில் சேரன் செங்குட்டுவன் கூறுவதைக் காண்க.

" மழைவளங் கரப்பின் வான்பே ரச்சம்
பிழையுயி ரெய்திற் பெரும்பே ரச்சம்
குடிபுர வுண்டுங் கொடுங்கோ லஞ்சி
மன்பதை காக்கும் நன்குடிப் பிறத்தல்
துன்ப மல்லது தொழுதக வில்லென " (சிலப்பதிகாரம்)

கைகேயி இராமனைக் காட்டிற்குப் போகப் பணித்த போது வண்டியில் பூட்டப்பட்ட ஓர் எருதினை அருட்குண முடையான் ஒருவன் அவிழ்த்துவிட்டால் அந்த எருது எவ்

வாறு மகிழ்ச்சி அடையுமோ அவ்வாறே இராமன் அரசபாரம் பெறுவதினின்றும் விலகியதற்கு மிகவும் மகிழ்ந்தான்என்பர் கம்பர். அரசபாரத்தின் பொறுப்பினை எடுத்துக்காட்ட வந்த சேக்கிழார்,

" அருமந்த அரசாட்சி அரிதோ? மற் றெளிதோதான் "

என்றார்.

தமிழ் நாட்டில் கோனாட்சியே (Monarchy) சிறப்பாக நடைபெற்று வந்தது. சேர சோழ பாண்டியர் என்ற வேந்தர் குடும்பங்கள் தமிழரிடையே மிகப் பழமையுடையனவாக விளங்கின. பழங்குடி என்பதற்குப் பொருள் கூற வந்த பரிமேலழகர், 'பழங்குடி என்பது தொன்றுதொட்டு வருகின்ற குடியின்கட்பிறந்தார். தொன்றுதொட்டு வருதலாவது சேர சோழ பாண்டியர் என்றாற்போலப் படைப்புக் காலந் தொடங்கி மேம்பட்டு வருதல்' என்றார். தந்தையின் பின் மைந்தன் அரசாள்வது மரபாகும். வாட்போரில் வெற்றி பெற்ற அரசிளங் குமரனுக்கு அந்நாட்டில் உள்ளார் வேண்டிய சிறப்புக்கள் செய்து அவனைத் தம் அரசனாகத் தேர்ந்தெடுத்தார்கள் என்பது 'பிள்ளை யாட்டு' என்று தொல்காப்பியர் கூறும் புறத்துறையால் விளங்குகின்றது. எனவே அரசனைத் தேர்ந்தெடுக்கும் உரிமையைக் குடிமக்கள் அக்காலத்தில் பெற்றிருந்தனர் என்பது பெறப்படுகின்றது.

இனி, அரசனது ஆட்சிமுறை எவ்வாறு விளங்கியது என்பதைக் காண்போம். அமைச்சு நாடு அரண் பொருள் படை நட்பு என இவைகள் அரசனுக்கு அங்கங்களாம். மன்னன் காட்சிக்கு எளியனாயும் கடுஞ்சொல் அற்றவனாயும் இருத்தல் வேண்டும். அக்காலத்தில், ஆட்சிபுரியும் அரசனுக்குத் துணையாக 'ஐம்பெருங்குழு' 'எண்பேராயம்' என்ற இரண்டு பேரவைகள் விளங்கின. அமைச்சர், புரோகிதர்,

சேனுபதியர், தூதுவர், சாரணர் என இவர்கள் கூடியது ஐம்பெருங்குழுவாம். கரணத்தியலவர், கருமவிதிகள், கனகச் சுற்றம், கடைகாப்பாளர், நகரமாந்தர், படைத்தலைவர், யானை வீரர், குதிரை வீரர் என்போர் அடங்கியது எண்பேராய மாகும். இவருள் கரணத்தியலவர் என்பார் அரசாட்சியின் வரவு செலவாகிய கணக்குப் பார்ப்பவர். அரசனது ஆணையை நிறைவேற்றும் அதிகாரிகள் கருமவிதிகள் எனப்படுவர். கனகச் சுற்றம் என்பார் பொருட்காப்பாளர். கடைகாப்பாளர் என்போர் அரண்மனைக் காவலர். நகரமாந்தர் என்போர் நகரத் திலுள்ள மூதறிஞர். எனவே நகரத்திலுள்ள சில மூதறிஞ ரும் அரசன் அவையில் இடம் பெற்றனர் என்பது புலனு கின்றது. நீதி தவருது அரசாட்சி செய்வதே மன்னனுக்கு வெற்றியாகும் என்பதைத் தமிழ்நாட்டு மன்னர் நன்கு உணர்ந்திருந்தனர். புலவர்கள் மன்னனுக்கு வெற்றி தருவது வேல் அன்று செங்கோலே என்பதனைப் பல அரசர்க்கு அறிவுறுத்தினர்.

"அறநெறி முதற்றே அரசின் கொற்றம்" (புறம்–55)

என்ருர் ஒரு புலவர். மன்னுயிரைத் தன் உயிர்போல் கருதி அரசாளும் வேந்தனைக் குடிகள் மிகவும் விரும்புவர். உதா ரணமாக இராமபிரானுடைய முடிசூட்டு விழாவினைக் கேட்ட அயோத்தி மக்கள் மிகவும் மகிழ்ச்சியடைந்து இராமன் அரசாள்வது குடிகளே அரசாள்வது போலாகும் என்ற கருத்தில்,

"பாவமும் அருந்துயரும் வேர்பறியு மென்பார்
பூவலய மின்றுதனி யன்றுபொது வென்பார்"

எனக் கம்பர் கூறியதைக் காண்க. 'மன்னன் எவ்வழி மன்னுயிர் அவ்வழி' என்பதற்கு ஏற்ப, அரசன் செங்கோல னுகின் அவன் நாட்டு மக்களும் நீதியினின்று வழுவார். குடி

மக்களுக்கு நல்லொழுக்கத்தைப் புகட்டுபவன் வேந்தன் என்பது,

" நன்னடை நல்கல் வேந்தற்குக் கடனே " (புறம்-312)

என்ற புறப்பாட்டால் விளங்குகின்றது. மன்னனது முறை காவல் குறையின், நாட்டில் மாதவர் நோன்பும் பெண்களின் கற்பும் காண்பது அரிதாகும் என்பதை,

" மாதவர் நோன்பு மடவார் கற்பும்
காவலன் காவ லின்றெனி னின்றால் "

(மணிமேகலை—22 : 208-9)

என்று மணிமேகலை வற்புறுத்துகின்றது. செங்கோல் முறையினைத் தமிழ் மன்னர் உணர்ந்தனர் என்பதற்குச் சில சான்றுகள் தருவேன். பசுவின் கன்று இறப்பதற்குக் காரணமாயிருந்த தன் மைந்தன் வீதிவிடங்கனை மனுச் சோழன் என்பான் தேர்க்காலில் கிடத்தித் தேரினை அவன் மீது செலுத்தினன் என்பதைப் பெரிய புராணம் கூறும். கோவலன் கொலையுண்டதற்குத் தானே காரணம் என்பதை உணர்ந்த பாண்டியன் நெடுஞ்செழியன் உயிர் நீத்ததை,

" பொன்செய் கொல்லன் தன்சொற் கேட்ட
யானோ அரசன் யானே கள்வன்
மன்பதை காக்குந் தென்புலங் காவல்
என்முதற் பிழைத்தது கெடுகவென் னாயுளென
மன்னவன் மயங்கிவீழ்ந் தனனே "

(சிலப்பதிகாரம் 20 : 74-78)

என இளங்கோவடிகள் கூறும் மாற்றம் தமிழ் நாட்டு மன்னர் செங்கோல் முறையினின்று தாம் தவறியது உணர்ந்த பின் உயிர்வாழார் என்பதற்கு எடுத்துக்காட்டாக விளங்குகின்றது.

இனி, அரசனுக்குரிய தொழில்கள் எவை என்பதை ஆராய்வோம். ஓதல், வேள்வி செய்தல், ஈதல், காத்தல் தண்டித்தல் என அரசருக்கு ஐவகைத் தொழில் உண்டு என்பர் தொல்காப்பியர். அரசன் நீதி நூல்களைக் கற்றவனும் யானை யேற்றம், குதிரை யேற்றம், படைக்கலம் பயிறல் முதலியவற்றில் பழக்கமுள்ளவனும் இருத்தல் வேண்டும். அரசன் கல்வியின் பயனால் அறிவுடையவனாய் இருப்பின் அது தன்னுயிர்க்கே யன்றி மன்னுயிர்க்கும் பயன்படுவதால் அரசனுக்கும் கல்வி இன்றியமையாததாகும். சோழன் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளி, பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி என்ற அரசர்களின் பெயரிடைக் காணும் அடைமொழிகளால் பண்டைக்கால மன்னர் வேத வேள்விகள் இயற்றினர் என்பது பெறப்படுகின்றது. சேர சோழ பாண்டியராகிய முடிமன்னரும், பாரி ஆய் அதியமான் முதலிய கடையெழு வள்ளல்களும் புலவர் பெருமக்களை ஆதரித்து வந்த வரலாற்றால் மன்னரின் கொடைச் சிறப்பு விளங்குகின்றது. எடுத்துக்காட்டாகப் பதிற்றுப்பத்தில் எட்டாம் பத்தினைப் பாடிய அரிசில்கிழார் என்ற புலவருக்கு அப்பாட்டுடைத் தலைவனாகிய பெருஞ்சேரல் இரும்பொறை என்ற அரசன் ஒன்பது நூறாயிரம் பொற்காசு பரிசில் கொடுத்ததன்றித் தனது அரச பதவியினையே புலவருக்கு அளித்தான். ஆனால் புலவர் அவ்வரச பதவியை அவனுக்கே மீட்டும் திருப்பிக் கொடுத்து அவனிடம் தாம் அமைச்சராய் விளங்கினர். மன்னன் பிறருக்குப் பொருள் வழங்குவானே யன்றி, குடிமக்களிடத்திலிருந்து தான் பரிசு பெறமாட்டான் என்பது 'பிறரைத்தா னிரப்பு அறியலன் இரந்தோர்க்கு மறுப்பறியலன்' (புறம்-239) என்ற புறப் பாட்டால் தெரியவருகின்றது.

இவ்வுலகத்தில் வாழும் மன்னன் தன் நாட்டில் வாழும் மக்களுக்கு, இடையூறு தன்னால், தன் பரிசனத்தால், பகைவரால், கள்வரால், ஏனை உயிர்களால் வரும் ஐந்து அச்சங்களையும் போக்கி ஆளுதல் வேண்டும் என்பர் சேக்கிழார். குற்றம் செய்யும் மக்களை அரசன் தண்டித்தல் வேண்டும். தீக் கொளுத்துபவர், நஞ்சிடுபவர், கொலை செய்வோர், திருடர், வழியில் கொள்ளையடிப்பவர், ஊரில் உள்ள பொருளைச் சூறையாடுபவர், பிறர்மனை விழைபவர் ஆகிய இவர்களை அரசன் கொன்று ஒழுக்கமுடைய பெரியோரைக் காப்பாற்றுதல் வேண்டும். இவ்வாறு அரசன் செய்தல் உழவன் ஒருவன் பயிர்க்குச் சேதம் விளைக்கும் களைகளைப் பிடுங்கிப் பயிரைக் காப்பதைப் போன்றதாகும் என்ற கருத்துடன் விளங்கும்.

கொலையிற் கொடியாரை வேந்தொறுத்தல் பைங்கூழ்
களைகட் டதனொடு நேர்

என்ற திருக்குறள் ஈண்டு நோக்கத்தக்கது.

தமிழ் நாட்டில் அரசனுக்கு உரிய வருவாய் எவை என்பதை இனி ஆராய்வோம். மக்கள் தம் நிலத்தில் விளைந்த விளையுளில் ஆறில் ஒரு பகுதி மன்னனுக்குக் கொடுத்தனர். இல்லறத்தான் ஒருவன் தனக்குள்ள பொருளை, தென்புலத்தார், தேவர், விருந்தினர், சுற்றத்தார், தான், அரசன் என அறுவகையாகப் பிரித்துக்கொண்டான் என்பது 'தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்கல் தானென்றாங்(கு), ஐம்புலத்தாறோம்பல் தலை' என்ற திருக்குறளின் விளக்கவுரையால் விளங்குகின்றது. தன் குடிமக்களுள் சிலர் வறுமையால் பீடிக்கப்பட்டு அரசனுக்கு வரிசெலுத்த இயலாத நிலையில் இருந்தபோது அரசன் அவர்களிடத்து வரி வாங்கவில்லை என்பதற்கு இலக்கியச் சான்று உள்ளது.

வெள்ளைக்குடிநாகனார் என்பவர் தம் நிலங்களுக்குரிய வரிப்பணத்தைச் செலுத்த இயலாத தம் நிலையை, சோழன் கிள்ளிவளவனிடம் முறையிட அவ்வளவன் அந்நிலங்களை இறைமாகவே அப்புலவர்க்குக் கொடுத்துவிட்டான். மன்னர் கடல் வாணிபத்திற்குரிய ஏற்றுமதி இறக்குமதிப் பொருளுக்குச் சுங்கம் வாங்கினர் என்பது பட்டினப்பாலையில் வந்துள்ள கரிகால் வளவனின் சுங்கச் சாலையின் சிறப்பால் தெரிகின்றது. உள்நாட்டு வாணிபத்திலும் அரசனுக்குச் சுங்கம் கிடைத்தது என்பது 'சாத்தொடு வழங்கும் உல்குடைப் பெருவழி' என்ற பெரும்பாணாற்றுப்படையால் விளங்குகின்றது. சுங்கம் என்பது அக்காலத்தில் உல்கு என்று வழங்கப்பட்டது. இவைகளன்றிச் சிற்றரசர்களும் பிறரும் முடிமன்னருக்குத் திறை செலுத்தி வந்தனர். சிலர் தம் திறைகளைக் காசாகச் செலுத்தினர். சில குடிமக்கள் தம் நிலத்தில் விளையும் பண்டங்களையும் அரசனுக்குத் திறையாகச் செலுத்தினர் என்பதைச் சிலப்பதிகாரத்தால் அறியலாம். இவ்வாறு குடிகளிடத்துப் பெற்ற பொருளினை மன்னன் நாட்டின் நலத்திற்கே செலவிட்டு வந்தான். கரிகால்சோழன் குடிகளின் பயிர்த்தொழிலுக்குப் பயன்படும்வண்ணம் காவேரி ஆற்றிற்கு அணைகட்டி நாட்டின் நீர் வளத்தைப் பெருக்கினான். தமிழ் மன்னர் பூஞ்சோலைகளையும், தெருக்களையும், சிறந்தமுறையில் அமைத்தனர். அரசனது பிறந்த நாளினைப் ' பெருநாள் ' ' பெருமங்கலம்' என வழங்கிக் குடிமக்கள் அந்நன்னாளினைச் சிறந்த முறையில் கொண்டாடினர்.

தமிழ் நாட்டில் பண்டைக்காலத்தில் விளங்கிய போர் அறப்போரன்றி மறப்போர் அன்று. இத்துறையில் அரசர் சாம, பேத, தான, தண்டம் என்ற முறையினைக் கையாண்டனர். அரசன் போர் தொடங்குவதற்கு முன்னர், குறிப்

பிட்ட நன்னாளில் தனது வெற்றி வாளையும் கொற்றக்குடையினையும் யானைமேலேற்றிக் கோட்டைக்கு வெளியில் செலுத்துவதுண்டு. இதனை 'நாட்கோள்' என்பர் தொல்காப்பியர். பண்டை நாளில் அரசனுக்குத் தேர்ப்படை, யானைப் படை, குதிரைப்படை, காலாட்படை என நால்வகைச் சேனைகளும் இருந்தன. சில அரசர்க்குக் கப்பற்படையும் உண்டு. வாள், வில், வேல், குந்தம், சக்கரம் முதலியன போர்க் கருவிகளாக விளங்கின. புலித்தோலாற் செய்த கவசத்தை வீரர்கள் அணிவதுண்டு. போருக்குப் புறப்படுவதற்குமுன் மன்னன் தன் படைகளுக்கு விருந்தளிப்பான். இதற்குப் 'பெருஞ்சோற்றுநிலை' என்று பெயர். போர், நாட்டில் ஒரு குறிப்பிட்ட இடத்தே நிகழும். போர் துவங்குவதற்குமுன் ஓர் அரசன் தான் போர் துவங்கப் போவதாகவும் அவ்வூரிலுள்ள, பசு, பார்ப்பன மக்கள், பெண்டிர் பிணியுடையோர், மக்கட்பேறு அற்றோர் முதலியோர் அவரவர்க்குரிய பாதுகாப்பான இடத்திற்குப் போகலாம் என்றும் அறிவிப்பான். பகைவரின் பசுக்கூட்டத்தைக் கவர்தல் போரின் தொடக்கமாகும். இதனை 'வெட்சித்திணை' என்பர். போரில் தமது பல்வேறுபட்ட வீரச்செயல்களைப் பிறருக்கு எடுத்துக்காட்ட வேண்டி மன்னனும் அவனது வீரர்களும் வஞ்சி, உழிஞை,வாகை முதலிய பூக்களை அணிவர். போர் நடக்குங் காலத்தில் அஞ்சிப் புறங்காட்டிச் செல்லும் வீரர், நடுங்கும் உள்ளமுடையோர், தலைமயிர் குலைந்தோர், படையிழந்தோர் ஆகிய இவர்மீது வீரர் அம்பினைச் செலுத்தார். இதுவே பண்டைக்கால அறப்போருக்குச் சான்றாக விளங்குகின்றது. போரில் வெற்றிபெற்ற வீரர்களுக்கு மன்னன் பொன்னாலாகிய வாகைப்பூவினை அளிப்பதுண்டு. வீரத்துடன் சண்டைசெய்து போரில் இறந்தவர்க்கு வீரக்கல் என்ற நடுகல் நாட்டுவது பண்டைக்கால மரபாகும்.

அக்காலச் சமயநிலையை நோக்கும்போது மன்னன் குடிகளுக்குச் சமயத்துறையில் முழு உரிமை அளித்ததாகத் தெரிகின்றது. அருகன் அறுமுகன் இந்திரன் காமன் சிவன் திருமால் பலதேவன் புத்தன் முதலிய கடவுளர்க்குத் தனிப் பட்ட கோயில்கள் தமிழ் நாட்டில் விளங்கின என்பதிலிருந்து மக்கள் அவரவர்க்கு உகந்த கடவுளரை வழிபட்டனர் என்பது பெறப்படுகின்றது. கி. பி. 7–ம் நூற்றாண்டிற்குப் பின்னரே நாட்டில் சைவ வைணவ சமண சமயத்தார்க்குள் பூசல் ஏற்பட்டது என்பது வரலாற்றால் அறியக்கிடக்கும் உண்மையாகும்.

இதுகாறும் கூறியவற்றால் பழந்தமிழர், மன்னனைக் கடவுளோடு ஒப்பவைத்து எண்ணினர் என்பதும், தமிழ் நாட்டில் முடியாட்சியாகிய கோனாட்சியே சிறந்த முறையில் நடைபெற்றது என்பதும், பண்டைக்காலப் போர் அறப் போராக விளங்கியது என்பதும், குடி மக்களுக்குச் சமயத் துறையில் உரிமை அளிக்கப்பட்டது என்பதும் ஒருவாறுகச் சுருக்கமாகக் கூறப்பட்டுள்ளன. இவற்றின் விரிவினைத் தமிழ் இலக்கியக் கடலுள் புகுந்து காண்மின்.

# 2

# பழந்தமிழர் பண்பு

பண்டைத் தமிழ் மக்களின் பண்பு, நாகரிகம், சமயம், அரசியல், தொழில் முதலிய இன்னோரன்ன பிறவற்றைப்பற்றி அறிதற்குத் தமிழ் நாட்டிலுள்ள கல்வெட்டுக்கள், பண்டை நாணயங்கள், தமிழ் நாட்டாரைப்பற்றிப் பிறநாட்டினர் எழுதி வைத்த நூல்கள் முதலியன கருவியாக விளங்குகின்றன. இவைகளைப் பார்க்கிலும் பண்டைத் தமிழ் மக்களின் பண்பினை அறிதற்குத் தமிழ் இலக்கியங்களே சிறந்த சான்றாக உள்ளன. தொல்காப்பியம், திருக்குறள், புறநானூறு முதலிய சங்க நூல்களில் பழந்தமிழ் மக்களின் பண்பினை விளக்கப் பல சான்றுகள் உள்ளன. இனி, பழந்தமிழ் மக்களின் பண்பினை வாழ்க்கைநிலை, மகளிர் பண்பு, ஆடவர் பண்பு என முக்கூறுபடுத்திக் காண்போம்.

**வாழ்க்கை நிலை** :—காந்தருவ மணத்தினைப் போன்ற களவுக் கூட்டம் தமிழ்நாட்டில் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்ற ஐந்திணைக்குரிய மக்களிடம் நடைபெற்று வந்தது என்பது தொல்காப்பியம் முதலிய நூல்களான் அறியக்கிடக்கின்றது. களவுக்கூட்டம் என்பது " பிணிமூப்புக்களின்றி, எஞ்ஞான்றும் ஒரு தன்மையராய் உருவும் திருவும் குலனும் குணனும் அன்பும் முதலியவற்றால் தம்முள் ஒப்புமையுடைய தலைமகளும் தலைமகனும் பிறர் கொடுப்பவும் அடுப்பவும் இன்றி, ஊழ் வகையால் தாமே எதிர்ப்பட்டுப் புணர்வதாகும்.'' இக் கூட்டத்தின் பின் அவர்கள் கற்பொழுக்கத்தில் தலைப்படுவர். கற்பாவது கொள்ளுதற்குரிய முறைமையினையுடைய தலைவன், வேள்விச் சடங்கோடுகூடத்

தலைவியை, அவள் பெற்றோர் கொடுப்ப, ஏற்றுக்கொள்ளுதல். *[இதனை ஏன் கற்பு எனக் கூறுதல் வேண்டுமெனில் "கொண்ட கணவனைவிடச் சிறந்த தெய்வம் இல்லை எனப் பெற்றோர் கற்பித்தலாலும், அந்தணர், சான்றோர் அருந்தவத்தோர், கடவுள் ஆகிய இவர்களிடத்து ஒழுகும் ஒழுக்கத்தைத் தலைமகன் கற்பித்தலாலும், இவளை இன்னவாறு பாதுகாப்பாய் என்றும், அவனுக்கு இன்னவாறு குற்றேவல் செய்தொழுக என்றும் அங்கியங் கடவுள் சான்றாக மந்திர வகையாற் கற்பிக்கப்படுதலாலும் இது கற்பெனப் படுவதாயிற்று" என்பர் நச்சினார்க்கினியர்.] உரோகிணியும் திங்களும் கூடிய நாள் திருமணக் காலத்திற்குச் சிறந்தது எனப் பண்டைத் தமிழர் கருதினர் என்பது அகநானூற்றால் அறியக் கிடக்கின்றது. பண்டைத் தமிழர் மணமுறை எத்தகையது என்பதை "உழுந்து தலைப்பெய்த" என்ற அகம் 86-ம் பாடலால் அறிக. வேத வேள்வியுடன் திருமணம் நடைபெற்றது என்பதனை,

"நீல விதானத்து நித்திலப்பூம் பந்தர்க்கீழ்
வானூர் மதியஞ் சகடணைய வானத்துச்
சாலி யொருமீன் தகையாளைக் கோவலன்
மாமுது பார்ப்பான் மறைவழி காட்டிடத்
தீவலஞ் செய்வது"

என்ற சிலப்பதிகாரத்தால் அறிக.

பண்டைத் தமிழர் அறிவறிந்த மக்கட் பேற்றினைப் பெறுவதே பெரும்பேறாகக் கருதினர்.

"எழுபிறப்புந் தீயவை தீண்டா பழிபிறங்காப்
பண்புடை மக்கட் பெறின்"

என்ற திருக்குறளின்படி நன்மக்களைப் பெற்ற ஒருவனுக்கு

*போதிய காலமின்மையால் இவ்வரிகள் வானொலிப் பேச்சில் படிக்கப்படவில்லை.

அப்பிள்ளைகள் செய்யும் நல்வினையால் அவனுக்கு எழு பிறப் பினும் துன்பம் வராது என்பதாம். அறிவை இன்பத்தால் மயக்கும் மக்களைப் பெறுதார் வாழ்க்கையானது பயனற்ற தாக முடியும் என்ற கருத்துள்ள,

" மயக்குறு மக்களை யில்லோர்க்குப்
பயக்குறை யில்லைத் தாம்வாழு நாளே "

என்ற புறநானூற்று அடிகள் ஈண்டு நோக்கத்தக்கன.

இவ்வாறு மக்கட்பேறு முதலிய பேறுகளைப் பெற்ற தலைவனும் தலைவியும் இல்லறத்தை நல்லறமாக நடத்துவர். பிதிரர், தேவர், விருந்தினர், சுற்றத்தார், தான் என்று சொல்லப்பட்ட ஐந்திடத்தும் செய்யும் அறநெறியினைத் தவறு மல் செய்தல் இல்வாழ்வானுக்குச் சிறப்புடைய அறமாகும் எனக் கூறுவர் திருவள்ளுவர். இல்லறத்தான் ஒருவன் தனது வருவாயினை ஆறு கூறுகளாக்கி அவற்றுள் ஒரு பகுதி யினை அரசனுக்குக் கொடுத்தல் வேண்டும் என்பதும் பரிமே லழகர் உரையால் விளங்குகின்றது.

" காமஞ் சான்ற கடைக்கோட் காலை
ஏமஞ் சான்ற மக்களொடு துவன்றி
அறம்புரி சுற்றமொடு கிழவனும் கிழத்தியும்
சிறந்தது பயிற்றல் இறந்ததன் பயனே " (தொல்-1138)

என்ற நூற்பாவின்படி, மக்கட்பேற்றுடன் இன்பமாகக் காலம் கழித்த தலைவனும் தலைவியும் சிறிது காலம் சென்ற பின் இல்லறத்தில் வெறுப்புற்று அறம் பொருள் இன்பம் என்ற மூன்றினும் சிறந்த வீட்டின்பத்தைப் பெறுதற்கு விழைந்து இல்லறத்தை விட்டு வானப்பிரஸ்தம் சந்நியாசம் முதலிய துறைகளுள் நின்று மெய்யுணர்ந்து வீடு பெறுவர். எனவே முன்னர் நடத்தும் இல்லறமே பின்னர் நடத்தப் போகும் துறவறத்திற்குக் காரணமாக உள்ளது என்பதனைப்

பண்டைத் தமிழர் உணர்ந்திருந்தனர் என்பது பெறப்படும்.

**மகளிர் பண்பு:**—இனி, பண்டைத் தமிழ்ப் பெண்களின் பண்பினை ஆராய்வோம். ஆசிரியர் தொல்காப்பியனார் பெண்களுக்குரிய இயற்கைப் பண்புகள் எவை என்பதைக் கீழ்க்கண்ட நூற்பாவால் விளக்கியுள்ளார்.

“அச்சமும் நாணும் மடனுமுந் துறுத்த
நிச்சமும் பெண்பாற் குரிய என்ப.” (தொல்-1045)

இதற்கு விசேட உரை எழுதிய உச்சிமேற் புலவர்கொள் நச்சினார்க்கினியர் “முந்துறுத்த என்றதனால் கண்டறியாதன கண்டுழி மனங் கொள்ளாத பயிர்ப்பும், செயத்தகுவது அறியாத பேதைமையும், திறப்பதற்கு நெஞ்சுண்டாம் நிறையும் கொள்க” என்றார். எனவே அச்சம், மடம், நாணம், பயிர்ப்பு, பேதைமை, நிறை (கற்பு) என்பன பெண்களுக்குரிய பண்புகளாம். பெண்ணின் கடமை யாது என்பதனை வள்ளுவர் வாய்மொழியால் நன்கு உணரலாம்.

“தற்காத்துத் தற்கொண்டாற் பேணித் தகைசான்ற
சொற்காத்துச் சோர்விலாள் பெண்”

என்ற பொய்யாமொழியின்படி கற்பினின்றும் வழுவாமல் தன்னைக் காத்துத் தன்னைக் கொண்ட கணவனையும் உண்டி முதலியவற்றால் பேணி, இருவர் மாட்டு நன்மையமைந்த புகழ் நீங்காமற் காத்து மேற் சொல்லிய நற்குண நற்செய்கைகளை என்றும் மறக்காதவளே பெண்ணாவாள் என்பது பெறப்படுகின்றது. பண்டைத் தமிழ்ப் பெண்மணிகளின் பண்புகளுள் மிகச் சிறந்து தோன்றுவது அன்னார் கற்புடைமையே யாகும்.

“உயிரினுஞ் சிறந்தன்று நாணே நாணினுஞ்
செயிர்தீர் காட்சிக் கற்புச்சிறந் தன்று” (தொல்-1059)

என்றதனால் எல்லாவற்றினுஞ் சிறந்த உயிரினும் மகளிர்க்கு நாண் சிறப்புடைய தென்பதும் அந்நாணினுங் குற்றம் தீர்ந்த கற்பினை நன்றெனை மனத்தில் காணுதல் சிறந்தது என்பதும் பெறப்படுகின்றது. இக்கற்பினைப் பண்டைத் தமிழோர் அன்பின் ஆற்றல் கொண்டு தலைக்கற்பு, இடைக் கற்பு, கடைக்கற்பு என முக்கூறுபடுத்திக் கூறியுள்ளனர். தன் கணவன் இறந்தான் என்ற செய்தியினைக் கேட்டவுடனே மனைவி உயிர் நீப்பாளாயின் அது தலைக்கற்பின்பாற்படும். இதுவே தொல்காப்பியத்தில் காணப்பெறும் காஞ்சித்திணை யில் வந்துள்ள 'மூதானந்தம்' என்ற துறையாகும். இது முதுமை - உழுவலன்புபற்றிய ; ஆனந்தம் - சாக்காடு, எனப் பொருள்படும். கணவனிடத்தே உள்ள மிக்க அன்பின் காரணத்தால் மனைவி உடனே உயிர் நீப்பதால் இது மூதா னந்தம் எனப் பெயர் பெற்றது. இத்துறைக்கு உதாரணம் தமிழ் இலக்கியத்தில் காணலாம். கோவலன் அநியாயமாகக் கொல்லப்பட்டதனை அறிந்த பாண்டியன் நெடுஞ்செழியன் தன் செங்கோல் வழுவியது கண்டு மனம் பொறாது உயிர் நீத்த காலத்தே அவன் மனைவி பெருங்கோப்பெண்டும் அவ னுடன் மாய்ந்தனள். இதனை,

> " மன்னவன் செல்வுழிச் செல்க யானெனத்
> தன்னுயிர் கொண்டவ னுயிர்தே டினள்போல்
> பெருங்கோப் பெண்டும் ஒருங்குடன் மாய்ந்தனள் "

என்ற சிலப்பதிகாரத்தால் அறிக. இனி இடைக்கற்பாவது கணவன் இறந்தபோது மனைவியும் அவனது ஈமத்தீயில் மூழ்கி உடன் இறத்தல். இது, தொல்காப்பியத்தில் கற் புடை மனைவி தன் கணவன் இறந்துழி அவனோடு எரிபுகு தல் வேண்டி எரியை விலக்குவாரோடு உறழ்ந்து கூறுதலாகிய 'புறங்காட்டு நிலை' அல்லது 'பாலைநிலை' எனக்

கூறப்பட்டுள்ளது. இப்பாலைநிலையும் காஞ்சித் திணையில் ஒரு துறையாகும். இத்துறைக்கு எடுத்துக்காட்டுப் பூதபாண்டியன் தேவியார் பாடிய "பல்சான்றீரே" எனத் தொடங்கும் புறநானூற்றின் 246-ஆம் செய்யுளாகும். பூதபாண்டியன் இறக்க அவனது தேவியான பெருங்கோப்பெண்டும் அவனது ஈமத்தீயுள் பாய்ந்து இறக்கப் புகும்போது சில சான்றோர் அவ்வம்மையாரை விலக்க அதற்கு அப்பாண்டிமாதேவியார், "நின் கணவனுடன் நீ இறப்பாயாக எனக் கூறாது என்னை விலக்கும் பொல்லாச் சூழ்ச்சிப் பல்சான்றீரே ! புளி கூட்டிச் சமைத்த வேளையிலையோடும் எள்ளுடனும் கூடிய நீர்ச்சோற்றுத்திரளை உண்டு பாயின்றித் தரையில் படுத்து உறங்கிக் கைம்மை நோன்பால் வருந்திக் காலம் கழிக்கும் பெண் யாமல்லம் ; ஈமத்தீயில் புகுதல் நுமக்கு அரிதாகத் தோன்றும். ஆனால் எமது கணவனை வைத்துள்ள ஈமத்தீ எமக்குப் பொய்கையை ஒத்ததாகும்"எனக்கூறிக் கணவனது ஈமத்தீயில் பாய்ந்து உயிர் நீத்தனள்.

கடைக்கற்பாவது கணவன்இறந்தபின் கைம்மை நோன்பு பூண்டு தவம் கிடத்தல். இதனைத் தொல்காப்பியர் காதலனை இழந்த மனைவி தவம் புரிந்தொழுகிய 'தாபதநிலை' என்பர். இதுவும் காஞ்சித்திணையைச் சேர்ந்த ஒரு துறையாகும். புறப்பொருள் வெண்பாமாலை ஆசிரியர் தாபதநிலையாவது,

" குருந்தலர் கண்ணிக் கொழுநன் மாய்ந்தெனக்
கருந்தடங் கண்ணி கைம்மைகூ றின்று"—(பு-வெ-மாலை-257)

எனபர.

" கூந்தல் கொய்து குறுந்தொடி நீக்கி
அல்லி உணவின் மனைவியோடு " (புறம் - 250)

என்ற புறப்பாட்டினின்று பண்டைக் காலத்தில் கைம்மை நோன்பு பூண்ட மகளிர் கூந்தலை நீக்கிவிடுதலும், அணிகலன்

களைக் களைதலும் மரபாகும் என்பது பெறப்படுகின்றது. மேலே கூறிய இம்மூவகையான கற்புடைப் பெண்டிரைக் குறித்து மணிமேகலையின் ஆசிரியராகிய சீத்தலைச்சாத்தனார்,

"காதலர் இறப்பின் கனையெரி பொத்தி
ஊதுலைக் குருகின் உயிர்த்தகத் தடங்கா(து)
இன்னுயிர் ஈவர் ஈயா ராயின்
நன்னீர்ப் பொய்கையின் நளியெரி புகுவர்
நளியெரி புகாஅ ராயின் அன்பரோ(டு)
உடனுறை வாழ்க்கைக்கு நோற்றுடம் படுவர்
பத்தினிப் பெண்டிர்" (மணிமேகலை 2 : 42-48)

எனக் கூறியுள்ளனர்.

பண்டைத் தமிழ் மகளிரிடத்தே விளங்கிய பண்புகளில் வீரமும் ஒன்றாகும். மறக்குடியில் பிறந்த மகளிரின் வீரத் தன்மையினை விளக்கப் புறநானூற்றில் பல சான்றுகள் உள்ளன. ஒரு வீரத்தாய் முதல் நாட்போரில் தனது தமையனையும், இரண்டாம் நாட்போரில் தனது கணவனையும் இழந்தாள். ஆனால் போர் நின்றபாடில்லை. ஆகவே அவள் மூன்றாம் நாட்போரில் செருப்பறை கேட்டு விருப்புற்று ஒரே மைந்தன் தன் குலத்திற்கு உள்ளான் என்பதையும் நோக்காது அச்சிறு மைந்தனை அழைத்து அவனுக்கு வெள்ளாடை உடுத்து வேல் கைக் கொடுத்து "செருமுக நோக்கிச் செல்க" என விடுத்தனள். (புறம். 279) இதுவன்றோ வீரம்! பண்டைக்காலப் பெண்டிருள் பலர் புலமை நலத்துடன் விளங்கினர் என்பது ஔவையார், பாரிமகளிர், குறமகள் இளவெயினி, வெண்ணிக்குயத்தியார் முதலிய பெண்பாற் புலவர் பாடிய பாக்களான் விளங்குகின்றது.

**ஆடவர் பண்பு** :—இனி, பண்டைக் காலத்தில் ஆடவர் பண்பு எத்தகையதாக விளங்கியது என்பதை ஆராய்

வாம். "பெருமையும் உரனும் ஆடூஉ மேன" (தொல். 1044) என்ற நூற்பாவின்படி அறிவு, ஆற்றல், புகழ், கொடை, வீரம், பழி பாவங்களுக்கு அஞ்சுதல் முதலிய வற்றால் ஏற்படும் பெருமை, கலங்காது துணிதல் முதலிய இன்னோரன்ன பிற பண்புகள் ஆடவர்க்குரியன என்பது விளங்குகின்றது மனைவியர் தம் கணவரை உயிர் எனக் கருதியது போல் கணவரும் தம் மனைவியரை உயிராகக் கருதினர் என்பது சங்க கால இலக்கியங்களால் போதரும். தன் மனைவியை இழந்து கணவன் வருந்துவதற்குக் 'தபுதார நிலை' என்று பெயர். இது தொல்காப்பியத்தில் வந்துள்ள காஞ்சித்திணையின் ஒரு துறையாகும். தபுதாரம் என்பதற்கு இழந்த தாரம் என்பது பொருள். இதற்கு உதாரணமாக விளங்குவது "யாங்குப் பெரிதாயினும்" எனத் தொடங்கும் புறம் 245-ஆம் பாட்டாகும். மாக்கோதை என்ற சேர மானின் மனைவி மாண்டனள். கண்டான் சேரமான். கழி துன்பம் கொண்டான். பின்னர் அவன் கீழ்வருமாறு கூறுகின்றான். "என் மனைவியின் உடல் ஈமத்தீயால் சாம்ப லாகிவிட்டது. அவள் என்னை விட்டுப் பிரிந்து மேல் உலகம் சென்றாள். என் துயரமோ அளவுகடந்துள்ளது. இருப் பினும் என்ன ? என் உயிர் இன்னும் போகவில்லையே. என் மனையாள் இறந்த பின்னும் யான் இன்னும் உயிருடன் வாழ் கின்றேனே" எனக் கூறி வருந்தினன். இதனால் பண்டைத் தமிழர் தம் வாழ்க்கைத்துணைவியரிடத்து எத்தகைய அன்பு வைத்திருந்தனர் என்பது விளங்குகின்றது.

*[தன் கணவனை ஒழிய வேறு ஒருவனைத் தேடிய வளும், தனது குற்றமற்ற மனைவியை ஏற்றுக் கொள்ளாது

---

*போதிய காலம் இன்மையால் இவ்வரிகள் வானொலிப் பேச்சில் படிக்கப்படவில்லை.

விட்டவனும், அரசன், ஆசான், தாய், தந்தை, தமையன் என்ற ஐம்பெருங்குரவரைப் பேணாது விட்டவனும் துன்பத் தினை அடைவர் என்ற கருத்தில்,

" குழற்சிகைக் கோதை சூட்டிக் கொண்டவ னிருப்ப மற்றோர்
கிழற்றிகழ் வேலி னானை நேடிய நெடுங்க ணாளும்
பிழைப்பிலாட் புறந்தந் தானுங் குரவரைப் பேணல் செய்யா(து)
இழுக்கினா ரிவர்கள் கண்டா யிடும்பைநோய்க் கிரைக ளாவார் "

(சிந்தாமணி : நாமகள் - 223)

என்றார் திருத்தக்கதேவர்.]

பண்டைத் தமிழ் மக்களிடத்து விளங்கிய சிறப்புடைய பண்புகளில் பிறன்மனை நோக்காத பேராண்மையும் ஒன்றா கும். பிறன் மனைவியை விரும்பாமையே சான்றோர்க்குத் தருமமும் ஒழுக்கமுமாகும் என்ற கருத்துள்ள அடியிற் காணும் பொய்யாமொழியினை நோக்குக.

" பிறன்மனை நோக்காத பேராண்மை சான்றோர்க்(கு)
அறனொன்றோ வான்ற வொழுக்கு "

" புறப்பகையாகிய பகைவனை அடக்கும் ஆண்மையுடை யோருக்கும் உட்பகையாகிய காமத்தை அடக்குதல் அருமை யாதலால் அதனை அடக்கிய ஆண்மையைப் 'பேராண்மை' என்றார் " என்பர் பரிமேலழகர். பிறன்மனை நோக்காத பேராண்மைக்கு உதாரணம் மணிவாசகனார் பாடியருளிய திருக்கோவையாருள் காணலாகும். ஒரு தலைவி தனது பெற் றோர் அறியாமற்படி தன் காதலனுடன் சென்றுவிட்டாள். அத் தலைவியைத் தேடுதற்காகச் செவிலித்தாய் பாலைவனத்தை நோக்கிச் செல்கின்றாள். வழியில் தன் எதிரே தூரத்தில் ஒரு தலைவனும் தலைவியும் ஒருசேர வருவதை, அவள் கண்டு தனது மகளும் அவளது காதலனும் மீண்டு வருவ தாகக் கருதுகின்றாள். அவர்கள் நெருங்கி வந்தவுடன்

தான் நினைத்தது தவறு என்பதையும் அவர்கள் வேறு இருவர் என்பதையும் உணர்ந்த செவிலித்தாய் அத்தலைவனை நோக்கி 'ஐய' நம்மையொத்த இருவராகிய என் மகள் ஒருத்தியும், பிறள் மகன் ஒருவனும் இவ்வழியிடைச் சென்றதை நீவிர் கண்டதுண்டோ ? எனக் கேட்கின்றாள். அதற்கு அத்தலைவன் தாயே, என்னை ஆட்கொண்ட தில்லையில் வாழும் கூத்தப்பெருமானின் மலையிலுள்ள சிங்கத்தையொத்த தோற்றத்தையுடைய ஒரு தலைவனைக் கண்டேன். அவன் பக்கத்தில் சென்றவர் இன்னார் என்பதை யான் காணவில்லை. இருந்தாலும் என் காதலியைக் கேட்டுக் கூறுகின்றேன், எனக் கூறித் தன் காதலியை நோக்கி, " தூண்டா விளக்கனை யாய் ! அந்த அம்மை கேட்பது யாது ? அதனை அவளுக்குச் சொல்வாயாக " என்றான். இதனால் அத்தலைவன் பிறன்மனை நோக்காத பேராண்மையுடையான் என்பது பெறப்படுகின்ற தன்றோ ! அக்கருத்துடைய செய்யுளைக் காண்க.

" மீண்டா ரெனஉவந் தேன்கண்டு நும்மையிம் மேதகவே
பூண்டா ரிருவர்முன் போயின ரேபுலி யூரெனைநின்(று)
ஆண்டான் அருவரை ஆளியன் னானைக்கண் டேனயலே
தூண்டா விளக்கனை யாரென்னை யோஅன்னை சொல்லியதே."

(திருக்கோவையார் - 244)

பண்டைத் தமிழரிடத்தே விளங்கிய பண்புகளில் மிகச் சிறந்து விளங்கியது அன்னார் மானமே யாகும். மானம் என்பது " தன் நிலையில் தாழாமையும் தெய்வத்தான் தாழ்வு வந்துழி உயிர் வாழாமையுமாம்." இப்பண்பினை விளக்கப் புறநானூறு முதலிய சங்க நூல்களில் பல உதாரணங்கள் உள்ளன. சேரமான் கணைக்காலிரும்பொறை என்பான் சோழன் செங்கணானொடு போர் செய்து தோல்வியுற்றுச் சிறையில் கிடந்தான். அதுபோழ்து அவன் ஒருமுறை சிறைக் காவலரைத் தண்ணீர் தா எனக்கேட்டு உடனே பெறாது

பின்னர்ப்பெற்று மானத்தால் அதனை உண்ணாது "குழவி இறப்பினும்" (புறம் - 74) என்ற பாட்டின் மூலம் தன் கருத்தினைத் தெரிவித்து இறந்தான். இதனால் பண்டைத் தமிழர் உயிரினும் மானத்தைச் சிறந்த பொருளாகக் கருதினர் என்பது பெறப்படுகின்றது. தன் உயிர் போவதாக இருந்தாலும் ஒருவன் தன் குடிப்பிறப்பிற்குப் பொருந்தாத, மானம் கெடவரும் செயல்களைச் செய்தலாகாது என்ற கருத்துள்ள கீழ்வரும் திருக்குறளை நோக்குக.

" இன்றி யமையாச் சிறப்பின வாயினுங்
குன்ற வருப விடல்."

இக்குறளுக்கு விசேட உரை எழுதப் போந்த பரிமேலழகர் "இறப்ப வருவழி இளிவந்தன செய்தாயினும் உய்க என்னும் வடநூல் முறைமையை மறுத்து உடம்பினது நிலையின்மையையும் மானத்தினது நிலையுடைமையையும் தூக்கி அவை செய்யற்க என்பதாம்" என்றார். இவ்விசேடவுரை ஒன்றே பண்டைத் தமிழ் மக்களின் மானத்தின் மாண்பினை விளக்கப் போதிய சான்றாகும்.

இதுகாறும் கூறியவற்றால் பண்டைத்தமிழர் களவு, கற்பு என இருவகை ஒழுக்கத்தினை மேற்கொண்டார் என்பதும், பழந்தமிழ் மகளிர்ப் பண்புகளுள் மிகச் சிறந்து தோன்றுவது அன்னார் கற்புடைமையே என்பதும், அவர்கள் வீரத்துடனும், புலமையுடனும் விளங்கினர் என்பதும், பண்டைக்காலத்துத் தமிழ்நாட்டு ஆடவர், மனையாளிடத்தே மட்டற்ற அன்பு, பிறன்மனை நோக்காத பேராண்மை, மானம் முதலிய அரிய பண்புகளுடன் வாழ்ந்தனர் என்பதும் ஒருவாறு சுருக்கமாக விளக்கப்பட்டன. இவைகளின் விரிவினைத் தமிழ் இலக்கியங்களுள் கண்டு மகிழ்க.

---

# 3

## ஐம்பெருங்காவியம் - குண்டலகேசி

சீவகசிந்தாமணி, சிலப்பதிகாரம், மணிமேகலை, குண்டல கேசி, வளையாபதி என்ற இவை ஐந்தும் ஐம்பெருங்காவியங் கள் எனப்படும். இந்த ஐந்தனுள் சிலப்பதிகாரம் மணிமேகலை என்ற இரண்டும் மற்ற மூன்று நூல்களுக்கும் காலத்தால் முற்பட்டன. அவ்வாறு இருந்தும் சுவை காரணத்தாலோ அன்றிப் பிறகாரணத்தாலோ சிந்தாமணி முன்னர் வைக்கப் பட்டுள்ளது. பஞ்சகாவியம் என்ற தொகுதி வடமொழியில் உண்டு. ஹர்ஷகவி இயற்றிய நைடதம், பாரவி இயற்றிய கிராதார்ஜுனீயம், காளிதாசகவி இயற்றிய இரகுவம்சம் குமாரசம்பவம், மாககவி இயற்றிய சிசுபாலவதம் ஆகிய இவை வடமொழியில் பஞ்சகாவியம் எனப்படும். காவியத் தின் இலக்கணம் யாது என நோக்குவோம். கவியால் செய் யப்படுவது காவியம். தமிழில் பொருள்தொடர்நிலைச் செய்யு ளையே காவியம் என வழங்குவர். காவியம், பெருங்காவியம் சிறுகாவியம் அல்லது காப்பியம் என இரண்டு வகையாகப் பிரிக்கப்பட்டுள்ளது. இனி, பெருங்காவியத்தின் இலக்கணத் தைக் காண்போம். பெருங்காவியம் பாயிரத்தில் வாழ்த்து, தெய்வ வணக்கம், எடுத்துக்கொண்ட பொருள் முதலியவற் றுள் ஒன்றினை ஏற்றுவரும். அறம் பொருள் இன்பம் வீடு என நாற்பொருளைப்பற்றியும் கூறும். காவியத்திற்குச் சிறந்த தலைவன் ஒருவன் உண்டு. இதில் மலை, கடல், நாடு, நகர், பருவம், ஞாயிற்றின் தோற்றம், திங்களின் தோற்றம் முத லியவை பற்றிய வருணனைகள் கூறப்பெற்றிருக்கும். இது திருமணம், முடி சூட்டுவிழா, புனல் விளையாட்டு, பொழில் விளையாட்டு, மக்கட்பேறு, புலவியிற் புலத்தல், கலவியிற் களித்தல், தூது, போர் முதலிய இன்னோரன்ன பிறபொருள்

களைப்பற்றிக் கூறுவதுடன் சருக்கம் இலம்பகம் முதலிய பிரிவுகளைக் கொண்டு எண்வகைச் சுவைகளும் நிரம்பப்பெற்ற தாகும். இதுவே பெருங்காவியத்தின் இலக்கணமாகும். அறம் பொருள் இன்பம் வீடு என்ற நான்கனுள் ஒன்ருவது பலவா வது கூறப்படாவிடில் அது சிறு காப்பியமாகும்.

ஐம்பெருங் காவியங்களுள் சிந்தாமணியும் சிலப்பதிகார மும் சைனசமயச் சார்பான காவியங்களாம். மணிமேகலையும் குண்டலகேசியும் பௌத்தசமயக் காவியங்கள். வளையா பதியை, சைனசமயக் காவியம் என்பர். அதனைப் பௌத்த சமயக் காவியம் எனக் கூறுவாரு முளர். ஐம்பெருங்காவியங்க ளுள் சிந்தாமணி சிலப்பதிகாரம் மணிமேகலை என்ற மூன்றினை யும் மகாமகோபாத்தியாய, டாக்டர். உ. வே. சாமிநாத ஐயர் அவர்கள் சிறந்த முறையில் பதிப்பித்துள்ளனர். குண்டல கேசி வளையாபதி என்ற இருகாவியங்களும் இதுவரையில் முற்றும் தனிப்பட்ட நூல்களாக வெளிவரவில்லை. எனவே, நமக்குக் கிடைக்காது மறைந்து போன நூல்களுள் குண்டல கேசியும் ஒன்ருகும். புறத்திரட்டு என்ற நூலின் வாயிலாக 19 குண்டலகேசிச் செய்யுட்கள் நமக்குத் தற்போது அகப் பட்டுள்ளன. தொல்காப்பிய உரை, வீரசோழிய உரை, யாப் பருங்கல விருத்தியுரை முதலிய இலக்கண நூல்களில் குண் டலகேசியைப் பற்றிச் சில குறிப்புக்கள் காணப்படுகின்றன. சைவ சித்தாந்த சாத்திரம் 14-ல் ஒன்ருன சிவஞானசித்தியார் பரபக்கத்திற்கு ஞானப்பிரகாசர் இயற்றிய உரையில் குண்டல கேசிச் செய்யுள் எடுத்துக் காட்டப்பட்டுள்ளது.

இதற்குக் குண்டலகேசி விருத்தம் என்ற ஒரு பெயரும் உண்டு என்பதும், இதில் கலித்துறைகள் வந்துள்ளன என்ப தும், வீரசோழிய உரையினுல் விளங்குகின்றன. யாப்பருங்கல உரையாசிரியர் குண்டலகேசியைத் தருக்க நூலில் அடக்கு வர். ஆகவே இது வைதிக சமயத்தினையும் சைன சமயத்

தினையும் தருக்க முறையில் கண்டித்துள்ளது என்பது அறியக் கிடக்கின்றது. இந்நூலை இயற்றியவர் நாதகுத்தனார் என்பது நீலகேசி உரையால் (மொக்கலவாதச் சருக்கம் 78-ம் செய்யுள் உரை) அறியப்படும். இவரது காலம் கி. பி. 5-ஆம் நூற்றாண்டு என்பர். இந்நூலில் விளங்காத சொல்லும் பொருளும் பல இருந்தன என்பது வீரசோழியவுரையால் விளங்குகின்றது. அவ்வுரையாசிரியர் இதனை அகலக்கவி என்பர்.

மணிமேகலை என்ற காவியம் அக்காவியத் தலைவியின் பெயரால் வழங்கப்படுவதுபோல் குண்டலகேசியும் அக்காவியத் தலைவியான குண்டலகேசியின் பெயரால் வழங்கப்படுகின்றது. குண்டலகேசியின் வரலாறு பாளி மொழியில் எழுதப்பட்ட 'தேரிகாதை' என்ற பௌத்த நூலிலும், 'தம்மபாதா' என்ற பௌத்த நூலிலும் காணப்படுகின்றது. [cf. The Commentary on the Dhammapada Vol. II page 217. (The Pali Text Society.)] இனி அவளது வரலாற்றினை நோக்குவோம்.

இராசகிருகம் என்ற நகரத்தை ஓர் அரசன் ஆண்டு வந்தான். அவனது ஆட்சியில் பொருட்காப்பாளனாக இருந்த ஒருவனுக்கு ஒரு பெண் குழந்தை பிறந்தது. அதற்குப் பத்திரை எனப் பெயரிட்டனர். மங்கைப் பருவம் எய்திய பத்திரை ஒரு நாள் தன் மாளிகையின் மேல் மாடியில் உலாவிக் கொண்டிருந்தாள். அதுபோழ்து அவ்வூர்ப் புரோகிதன் மகன் சாதுகன் என்பவன் வழிபறித்தல் என்ற குற்றத்தைச் செய்ததால் அவனைச் சேவகர்கள் கொலைக்களத்திற்கு அழைத்துச் சென்றனர். நீலகேசியில் சாதுகனுடைய பெயர் காளன் எனக் குறிக்கப்பட்டுள்ளது. கட்டழகு மிக்க சாதுகனைக் கண்ட பத்திரையின் மனம் பள்ளத்துட் பாயும் வெள்ளம் போல் சாதுகனை அடைய எண்ணியது. அவள் சாதுகனையே மணம் புரிந்துகொள்ள வேண்டுமென்றும்

அன்றேல் உயிர்விடப் போவதாகவும் கூறினள். அவளது வார்த்தையைக் கேட்ட அவள் தந்தை தனது மகளிடத்தே கொண்டுள்ள அன்பின் மிகுதியால் அச்சேவகர்களுக்குக் கைக்கூலி கொடுத்துச் சாதுகனை மீட்டு, அவன் பத்திரையை மணம் புரியுமாறு செய்தான். பத்திரையும் சாதுகனும் சிறிது காலம் வாழ்க்கையை இன்பமாக நடத்தி வந்தனர்.

ஒரு நாள் அவர்களுக்குள் ஒரு ஊடல் நேர்ந்தது. அப்போது பத்திரை சாதுகனை நோக்கி "நீ முன்பு கள்வன் அல்லனோ" எனக் கூறினாள். இதைக் கேட்ட சாதுகன் மிக்க கோபங்கொண்டானேனும் தனது கோபத்தை வெளிக் காட்டாது அடக்கிக் கொண்டான். தனது மனைவி அணிந்திருந்த அணிகலன்களை எல்லாம் எடுத்துக்கொண்டு அவளை விட்டு விலக வேண்டும் என்ற தீய எண்ணம் அவன் உள்ளத்தில் குடிகொண்டது. இதனால் அவன் ஒரு நாள் தன் மனைவியை நோக்கி "பத்திரை! என் உயிரை முன்பு காப்பாற்றிய தெய்வத்திற்கு யான் காணிக்கை கொடுத்து வழிபடுவதற்காக ஒரு மலை உச்சிக்குப் போகப் போகின்றேன். நீயும் அதற்குக் காணிக்கை கொடுத்து வழிபடுவதற்கு என்னுடன் வருதல் வேண்டும்" என்றனன். இதைக் கேட்ட பத்திரை உயர்ந்த அணிகலன்களை அணிந்துகொண்டு சாதுகனுடன் மலை உச்சிக்குச் சென்றனள். கள்ளத்தனமுடைய சாதுகன் தன் மனைவியை நோக்கி, 'பத்திரை! நீ அன்று என்னைக் கள்வன் என்று கூறினாய். ஆதலால் யான் உன்னை இப்போது கொல்லப் போகின்றேன். நீ இறப்பதற்கு முன் உன் வழிபடு கடவுளை நினைத்துக்கொள்' என்றான். இதைக் கேட்ட அவள் "தற்கொல்லியை முற்கொல்லிய" என்பதற்கேற்ப அவன் தன்னைக் கொல்வதன் முன் தான் அவனைக் கொல்ல வேண்டுமென்ற கருத்தினை உட்கொண்டு அவன் கட்டளைக்கு அடங்கி நடப்பவள்போல் நடித்து "ஐயனே! எனது

கணவராகிய தங்களைத் தவிர வேறு தெய்வம் எனக்கு இல்லை, ஆதலின் யான் உங்களை வலம் வந்து பணிகின்றேன்" எனக் கூறி வலம் வருவதுபோலப் பின் சென்று அவனை மலையுச்சியி னின்றும் தள்ள அக் கள்வன் கீழே விழுந்து இறந்தான்.

கணவன் இறந்தபின்னர்ப் பத்திரை இவ்வுலக வாழ்க்கை யில் வெறுப்புக்கொண்டு சைன மதத்தின் ஒரு பிரிவாகிய நிகண்டாவாதிகளின் கூட்டத்தைச் சேர்ந்தாள். அவர்கள் அவளைத் தம் மதத்துள் சேர்த்துக்கொண்டனர். அம்மத வழக்கப்படி பத்திரையின் கூந்தல் நீக்கப்பட்டது. ஆனால் அக்கூந்தல் மீண்டும் சுருண்டு வளர்ந்ததால் அவளை எல் லோரும் குண்டலகேசி என அழைத்தனர். குண்டலகேசி என்பது சுருண்ட கூந்தலை யுடையவள் எனப் பொருள்படும்.

சைன சமயத்தினைச் சார்ந்த குண்டலகேசி அந்தச் சம யத்தின் கொள்கைகளையும் சாத்திரங்களையும் நன்கு கற்றுச் சமயவாதம் புரியப் புறப்பட்டுப் பல ஊர்களுக்குச் சென்றாள். சமயவாதம் செய்பவர் ஊர் நடுவில் மணல் மேட்டில் சமய வாதம் செய்யப்போவதாகக் குறிப்பிடவேண்டி ஒரு நாவல் மரக்கிளையை நடுவது அக்கால வழக்கமாகும். அவ்வாறே குண்டலகேசி சிராவஸ்தி என்ற ஊரின் நடுவில் ஒரு மணல் மேட்டில் சமயவாதத்தின் நிமித்தம் ஒரு நாவல் மரக்கிளையை நட்டுவிட்டுத் தான் உணவு பெறுதற்கு வெளியே சென்றாள். புத்தரின் சீடருள் ஒருவரான சாரிபுத்திரர் என்பவர் குண் டலகேசியுடன் வாதம் புரிவதற்குச் சில சிறுவர்களைக் கொண்டு அம்மரக்கிளையைப் பிடுங்கி எறியும்படி செய்தார். வெளியே சென்ற குண்டலகேசி திரும்பி வந்து நடந்ததைக் கண்டு சாரிபுத்திரருடன் வாதம் புரிந்து தோற்றுப்போய் அவரது குருவாகிய புத்தரைக் கண்டு வணங்க, புத்தர் அவ ளுக்கு உபதேசம் செய்து குண்டலகேசியைப் பௌத்த மதத்தில் சேர்த்துக்கொண்டார். இதுவே குண்டலகேசியின்

வரலாற்றுச் சுருக்கமாகும். சூடாமணிப் புலவர் என்பவர் இயற்றிய வைசிய புராணத்தில் 34-வது சருக்கமாகிய ' பஞ்ச காவியத் தலைவரில் காவேரி குண்டலகேசி பெற்ற சருக்கம் ' என்பதில் மேலே காட்டிய குண்டலகேசி வரலாற்றிற்கு ஒரு சிறிதும் பொருத்தமில்லாத வேறு ஒரு கதை கூறப்பட்டுள்ளது. குண்டலகேசி என்பது பௌத்த சமயச்சார்பான நூலாகும். இதில் கண்ட பௌத்த சமயக் கொள்கைகளை மறுப்பதற்காகவே நீலகேசி என்ற சைன நூல் தோன்றிய தென்பது சிறுகாப்பியங்கள் ஐந்தனுள் ஒன்றான நீலகேசியால் அறியலாகும். தற்போது நீலகேசி என்ற நூல் நமக்குக் கிடைத்துள்ளது. ஆனால் நாம் குண்டலகேசியை இழந்துவிட்டோம்.

புறத்திரட்டின் வாயிலாக 19 குண்டலகேசிச் செய்யுட்கள் நமக்குக் கிடைத்துள்ளன என்பதை முன்னரே குறிப்பிட்டேன். அவைகளுள் சிலவற்றை ஈண்டுக் காண்போம். அரசனது சிறப்பு இந்நூலில் அழகாக விளக்கப்பட்டுள்ளது. செங்கோல் வழுவாது மன்னுயிரைத் தன்னுயிர்போல் கருதி அரசாளும் மன்னனைப் பண்டைத் தமிழர் கடவுளோடு ஒப்ப வைத்து எண்ணினர். இந்நூலில் மன்னன் கடவுளுக்கு ஒப்பாவான் என்ற கருத்து நன்கு வலியுறுத்தப் படுகின்றது.

இறந்த நற்குணம் எய்தற்கு அரியவாய்
உறைந்த தம்மைஎல் லாம்உட னாக்குவான்
பிறந்த மூர்த்தியொத் தான்திங்கள் வெண்குடை
அறம்கொள் கோல்அண்ணல் மும்மத யானையான்

(குண்டலகேசி—புறத்திரட்டு - 494)

பிறந்த மூர்த்தி என்பது இவ்வுலகத்தில் திருவவதாரம் செய்த புத்தர் பெருமானைக் குறிப்பதுபோலும். அரசன் இறைவனுக்கு ஒப்பாவான் என்ற கருத்தினைச் சிறுகாவியம் ஐந்தனுள் ஒன்றான சூளாமணியும் எடுத்துக் கூறுகின்றது.

" இருமையும் ஒருமை யாலே இயற்றலின் இறைவன் போலப்
பெருமையும் உடைய தெய்வம் பிறிதினி இல்லை யன்றே "
(சூளாமணி - மந்திரசாலைச் சருக்கம் - 29)

குண்டலகேசியில் யாக்கை நிலையாமையைப் பற்றிய குறிப்புக்கள் காணப்படுகின்றன. ஒருவர் இறந்துவிட்டால் அவரைக் குறித்து அவரது உறவினரும் நண்பரும் வருந்துவது உலக இயல்பு. குண்டலகேசி ஆசிரியர் நாம் அவ்வாறு வருந்துதல் கூடாது என்றும், நமது பாலப்பருவம் காளைப் பருவம் இளமைப்பருவம் மூப்புப்பருவம் ஆகிய பருவங்கள் ஒன்றன்பின் ஒன்றாகக் கழிந்து கொண்டே வருவதால் நாம் நமது வாழ்நாளில் நாள்தோறும் ஒரு நாளை இழக்கின்றோம் என்றும், ஆதலால் நமக்கு நாமே அழுதல் வேண்டும் என்றும் கூறுவதைக் காண்க.

பாளையாம் தன்மை செத்தும்
பாலனாந் தன்மை செத்தும்
காளையாம் தன்மை செத்தும்
காமுறும் இளமை செத்தும்
மீளுமிவ் வியல்பு மின்னே
மேல்வரு மூப்பு மாகி
நாளுநாட் சாகின் றாமால்
நமக்குநாம் அழாத(து) என்னோ.

(குண்டலகேசி - புறத்திரட்டு - 390)

ஐம்பெருங்காவியங்களுள் ஒன்றான சிந்தாமணியின் ஆசிரியர் திருத்தக்கதேவர் யாக்கை நிலையாமையை மிக அழகுடன் ஓர் உருவகத்தின் வாயிலாக விளக்கியுள்ளார். ஆசிரியர் நமது நிலையா வாழ்க்கையினை ஒரு மரத்திற்கு ஒப்பிடுகின்றனர். நமது அறியாமையை வித்தாகவும், தீவினையை மரமாகவும், ஆசையினை வேராகவும், காதலையும் களிப்பினையும் கிளைகளாகவும்

துன்பத்தைப் பூவாகவும், கவலையைக் காயாகவும்,மரணத்தைக் கனியாகவும் ஆசிரியர் உருவகிக்கும் தன்மையினைக் காண்க.

பேதைமை யென்னும் வித்தில்
பிறந்துபின் வினைகள் என்னும்
வேதனை மரங்கள் நாறி
வேட்கைவேர் வீழ்த்து முற்றிக்
காதலுங் களிப்பு மென்னுங்
கவடுவிட்(டு) அவலம் பூத்து
மாதுயர் இடும்பை காய்த்து
மரணமே கனிந்து நிற்கும்.

(சிந்தாமணி - பதுமையார் இலம்பகம் - 224)

குண்டலகேசியில் வந்துள்ள சில கருத்துக்களைச் சிந்தாமணியிலும் காணலாகும். தான் இன்பம் அடைவது தனது நல்வினையின் பயன் என்பதையும் துன்பம் உறுவது தனது தீவினையின் பயன் என்பதையும் உணர்ந்த ஒருவன், சிறைவாய்ப் பட்ட போதும் துன்பம் அடைந்தானில்லை. சிறையினின்றும் விடுதலை பெற்றபோதும் மகிழ்ச்சி அடைந்தானில்லை. இதனை அடியிற்காணும் குண்டலகேசிச் செய்யுள் விளக்குகின்றது.

வேரிக் கமழ்தார் அரசன்விடு கென்ற போழ்தும்
தாரித்த லாகா வகையாற்கொலை சூழ்ந்த பின்னும்
பூரித்தல் வாடுதல் என்(று) இவற்றால்பொலி வின்றிநின்றான்
பாரித்த தெல்லாம் வினையின்பயன் என்ன வல்லான்.

(குண்டலகேசி - புறத்திரட்டு - 724)

இதே கருத்தினைக் கீழ்க்காணும் சிந்தாமணி பதுமையார் இலம்பகம் 2-ஆம் செய்யுளில் காணலாம்.

விலங்கிவில் உமிழும் பூணான்
விழுச்சிறைப் பட்ட போழ்தும்
அலங்கலந் தாரி னான்வந்(து)
அருஞ்சிறை விடுத்த போழ்தும்

புலம்பலும் மகிழ்வும் நெஞ்சிற்
பொலிதலும் இன்றிப் பொன்னூர்(து)
உலங்கலந் துயர்ந்த தோளான்
ஊழ்வினை என்று விட்டான்.

(சிந்தாமணி - 1174)

குண்டலகேசியின் கடவுள் வாழ்த்துச் செய்யுளில் இறைவனது பெருமையும் இறைவன் எனப் பிறரால் வணங்கத்தக்கவனது பண்புடைமையும் இனிதே விளக்கப்பட்டுள்ளன. இச்செய்யுளில் புத்தபெருமானின் குணநலன்கள் கூறப்பட்டுள்ளன. பெருமைக் குணத்தோடு விளங்குதல், இறுதிவரை நல்லவை நினைத்தல், நற்குணங்களைப் பிறர்க்கெடுத்துஓதுதல், தனக்கென வாழாப் பிறர்க்குரியாளனும் தன்மை ஆகியஇவை அனைத்தும் புத்தர் பெருமானின் பண்புகளாம். அத்தகையோன் திருவடியை வணங்குவோமாக என ஆசிரியர் காப்புச் செய்யுள் கூறுகின்றனர்.

முன்றான் பெருமைக்கண் நின்றான்முடி வெய்து காறு
நன்றே நினைந்தான் குணமேமொழிந் தானத னக்கென்(று)
ஒன்றேனும் இல்லான் பிறர்க்கேஉறு திக்கு ழந்தான்
அன்றே இறைவன் அவன்தாள்சர ணங்க ளன்றே.

(குண்டலகேசி - புறத்திரட்டு - 7)

இச்செய்யுளின் "தனக்கென்று ஒன்றேனும் இல்லான் பிறர்க்கே உறுதிக்குழந்தான்" என்ற வரியின் கருத்தானது "தனக்கென வாழாப் பிறர்க்குரியாளன்" என்ற மணிமேகலை வரியினை நினைப்பூட்டுகின்றது. இத்தகைய அரிய நூலினை நாம் இழந்துவிட்டோம். இதனைத் தேடிக் கண்டுபிடித்து வெளியிடுதலே தமிழ்த் தாய்க்கு நாம் செய்யும் தலையாய பணியாகும். இறைவன் திருவருள் கூட்டுவதாக.

———

# 4

# திருக்கோவையார்

திருக்கோவையார் என்பது சைவ சமய குரவருள் ஒருவராகிய மாணிக்கவாசக சுவாமிகள் பாடியருளிய ஓர் அரிய நூலாகும். இவர் தண்ணார் தமிழளிக்கும் பாண்டி நாட்டில் ஒருவாத புகழுடைய திருவாதவூரில் அவதரித்தார். தில்லையிலுள்ள எல்லையற்ற பரம்பொருளான நடராஜப் பெருமான், இவர் பாடியருளிய திருவாசகத்தையும் திருக் கோவையாரையும் தாமே எழுதிக்கொண்டு பொன்னம்பல வாசற்படியுள் வைத்து மறைந்தார் என்பது இவர் வரலாற்றால் அறியக்கிடக்கின்றது. இதனை, சிவப்பிரகாச சுவாமிகள் "நலமலி வாதவூர் நல்லிசைப் புலவ......நீ புகழ்ந்துரைத்த பழுதில் செய்யுள் எழுதினன் அதனால், புகழ்ச்சி விருப்பன் போலும், இகழ்ச்சி அறியா வெண்பணி வானே" எனப் பாராட்டியுள்ளனர். மாணிக்கவாசகரது காலம் கி. பி. 3-ஆம் நூற்றாண்டு என்பர். கி. பி. 9-ஆம் நூற்றாண்டு எனக் கூறு வாரும் உளர்.

திருச்சிற்றம்பலமாகிய சிதம்பரத்தையும் அங்குள்ள ஸ்ரீ நடராஜப் பெருமானையும் சிறப்பாகக் கூறும் இந்நூல் திருச்சிற்றம்பலக்கோவையார் என்றும் திருக்கோவையார் என்றும் வழங்கப்பெறும். அகப்பொருள் துறைப்பாடல் களால் கோவை செய்யப்பட்ட நூல் கோவையாகும். அகப் பொருள் என்பது உள்ளத்தில் நிகழும் காதலின்பத்தைக் குறிக்கும். இது களவு, கற்பு என இரண்டு பிரிவுகளை யுடையது. சிற்றின்பமே, என்றும் நிலையாகவுள்ள பேரின்ப

மாகிய வீடு பெறுதற்கு வழிகாட்டியாக உள்ளதால் தேவாரம் பாடிய மூவர், மாணிக்கவாசகர், ஆழ்வார்கள், இராமலிங்க சுவாமிகள் முதலிய பெரியோர்கள் அகத்துறைப் பாடல்மூலம் இறைவனைப் பாடியுள்ளனர். இவ்வாறு பாடும் முறை "காமப் பகுதி கடவுளும் வரையார், ஏனோர் பாங்கினு மென்மனார் புலவர்" (தொல்-புறத்திணை-28) என்ற தொல்காப்பியச் சூத்திரத்தின்படி, புறத்திணையுள் பாடாண்டிணைப் பகுதி யாகும். சிலர் இது அகத்திணையுள் பெருந்திணையின்பாற் படும் என்பர். தலைவனும் தலைவியும் நிகழ்த்தும் களவு, கற்பு என்னும் ஒழுக்கங்களை விளக்க, திருக்கோவையார் 400 பாக்களைக் கொண்டுள்ளது.

இனி, இந்நூலின்கண் வந்துள்ள சில கவிகளின் நயத்தினைக் காண்போம். பொதுவாகப் புலவர்கள் பெண்களின் கண்ணின் சிறப்பினைக் கூறும்போது, தாமரை, குவளை, வேல், கயல்மீன் முதலிய பொருள்களை உவமையாகக் கூறுவதுண்டு. ஆனால் மாணிக்கவாசகர் இங்குக் கூறும் உவமை தனிப்பட்டதாகும். தலைவன் ஒருவன் தன் தலைவியின் கண்களின் அழகினைத் தோழிக்கு எடுத்துக் கூறுகின்றான். 'தோழி! என்னுடைய தலைவியின் கண்கள் சிவபெருமானிடத்து யான் வைத்த அன்புபோல் அகன்று, அவன் நீக்கிய என் பாசம் போலக் கறுத்து, அவனது தில்லையின் ஒளியை ஒத்து, அவன் தோள்களிற் பூசும் அத்திருநீறு போல வெளுத்து, அவன் திருவடிகளை யான் பேசும் திருவார்த்தைபோல மிகவும் நெடிய வாய் இருக்கும்' என்றான். அச்செய்யுளை நோக்குவோம்.

*ஈசற்கு யான்வைத்த அன்பி னகன்றவன் வாங்கியவென்*
*பாசத்தின் காரென் றவன்தில்லை யின்னொளி போன்றவன்*
*பூசத் திருநீ றெனவெளுத் தாங்கவன் பூங்கழல்யாம் [தோள்*
*பேசத் திருவார்த்தை யிற்பெரு நீளம் பெருங்கண்களே.*

(திருக்கோவையார் - 109)

இப்பாட்டில் வந்துள்ள பக்திச் சுவையினைக் கண்டு இன்புறுக. பக்திச்சுவை நனி சொட்டச் சொட்டப் பாடிய கவிவலராகிய சேக்கிழார் சுவாமிகள், சிவபெருமானின் திருமேனியிலுள்ள திருநீற்றின் ஒளி போன்று விளங்கியது சந்திரன் என்ற கருத்தோடு, "அண்ணல் வெண்ணீற்றின் பேரொளி போன்றது நீள் நிலா" (தடுத்தாட்கொண்ட புராணம் - 162) எனக் கூறியுள்ளனர். இருள் தோன்றியது என்று கூறும்போது, "பரன் அஞ்செழுத்தும் உணரா அறிவிலோர் நெஞ்சம் என்ன இருண்டது நீண்டவான்" (தடுத்தாட்கொண்ட புராணம் - 159) என்றார். எனவே, இறைவனிடத்தில் இறவாத இன்ப அன்புடைய அடியார்கள் எப்பொருள் பற்றிப் பேசினும் இறைவன் குணத்தினையே அப்பொருளுக்கு உவமையாகக் கொள்வர் என்பது பெறப்படுகின்றது.

தலைவன் மணந்துகொள்ளாமையால் தலைவி கொண்ட வருத்தத்தை, தோழி அவனிடம் கூறி, தலைவியை அவனுடைய ஊருக்கு உடன் அழைத்துச் செல்லுதல் நலம் எனக் கூறுகின்றாள். அதனைக் கேட்ட தலைவன், "தோழி! எனது ஊர் வெகுதூரத்தில் உள்ளது. இடையிலுள்ள வெம்மையான காட்டில் நடந்தால் தலைவியின் மலர்போன்ற பாதங்கள் சூடு பொறுக்கமாட்டாது கன்றிப்போய்விடும்" என்ற கருத்துடன், "......மெல்லடிப்பூக், கல்லியல் வெம்மைக் கடம் கடுந்தீ......எல்லை சேய்த்து எம் அகல் நகரே" (திருக்கோவையார்-201) என, உடனே தோழி, 'தலைவி உன்னுடன் சென்றால் அவளுக்கு வெம்மையான காடும் குளம் போன்று குளிர்ந்து விளங்கும்' என்னும் கருத்தோடு, "முரம்பு நிரம்பிய அத்தமும் ஐய! மெய்யே.......தில்லைத் தண்பூம் பணையும் தடமும் அன்றே நின்னோடு ஏகின் எம் பைந்தொடிக்கே" (திருக்கோவையார் - 202) என்றாள்.

திருக்கோவையாரிலுள்ள இது போன்ற பல கருத்துக்கள் சங்க நூல்களில் விளங்கக் காணலாம். "காட்டில் உடன் வருதல் தலைவிக்குத் துன்பம் தரும் என்பீராகில் உம்மைப் பிரிந்து தனியே வீட்டில் இருத்தல் தலைவிக்கு இன்பம் தருமோ" என்ற தோழியின் கூற்றாக வந்துள்ள கீழ்க்காணும் குறுந்தொகைச் செய்யுள் ஈண்டு நோக்கத்தக்கது.

உமணர், சேர்ந்து கழிந்த மருங்கி னகன்றலை
ஊர்பாழ்த் தன்ன வோமையம் பெருங்காடு
இன்னா வென்றி ராயின்
இனியவோ பெரும தமியோர்க்கு மனையே.

(குறுந்தொகை - 124)

சீதாபிராட்டியார் இராமபிரானுடன் காட்டிற்குப் போவ தற்குச் சித்தமாய் இருந்ததைக் கண்ட இராமர் காட்டின் வெம்மையைப் பிராட்டியாருக்கு எடுத்துக் கூற, அம்மையார் மிகவும் வருந்தி, "நின் பிரிவினும் சுடுமோ பெருங்காடு என்றாள்" (நகர்நீங்கு படலம் - 226) எனக் கம்பர் கூறு வதைக் காண்க.

தலைவிக்கும் தலைவனுக்குமுள்ள ஒற்றுமை தோழியின் வாயிலாக இந்நூலில் வெகு அழகாக விளக்கப்பட்டுள்ளது. "இருவருக்கும் இன்ப துன்பங்கள் பொதுவாக வரும். காக்கையின் இரண்டு கண்களுக்கும் மணி ஒன்றே கலந்தாற் போல இருவர் யாக்கையுள் ஓர் உயிரை யான் இன்று கண்டேன்" என்றாள் தோழி. (செய்யுள்-71) தலைவன் தன் காதலியைக் குறிக்கும்போது அவளைத் தன் உயிர் என்றே குறிப்பிடல் "மயிற்குலம் கண்டதுண்டேல் அது என்னுடை மன்னுயிரே" (திருக்கோவையார் - 36) என்றும், "மாயத் ததாகி இதோ வந்து நின்றது என் மன்னுயிரே" (திருக் கோவையார் - 39) என்றும் கூறியவற்றால் விளங்குகின்றது.

தலைவி, தலைவனுடன் சென்றாள் என்பதைத் தோழியின் மூலம் அறிந்த செவிலித்தாய் மிகவும் வருந்தித் தலைவியை மீட்கும்பொருட்டு அவர்கள் சென்ற வழியே சென்று எதிரே வந்தவர்களை நோக்கி 'ஐயன்மீர் ! என்மகள் ஒருத்தியும் பிறள் மகன் ஒருவனும் இவ்வழியே போகக் கண்டதுண்டோ' என வினவுகின்றாள். அதற்கு அவர்கள், 'அம்மையே ! சந்தனமும் முத்தும் சங்கும் தாம் பிறந்த இடங்களுக்கு யாதும் பயன்படாமல், தம்மை விரும்பி அணிபவருக்கே பயன்படும். அதுபோல உன் மகளும் உம்மிடத்துப் பிறந்தாளாயினும் அவள் தலைவன் ஒருவனையே தன் நாயகனாகக் கருதி, கற்பு நெறிப்பட்டு அவன்பின் சென்றாள். இது உலக இயற்கை. நீ, அவள் பிரிவின் நிமித்தம் கவலைகொள்ள வேண்டாம் !' என்றனர்.

"சுரும்பிவர் சந்துந் தொடுகடல் முத்தும் வெண்சங்குமெங்கும்
விரும்பினர் பாற்சென்று மெய்க்கணி யாம்வியன் கங்கையென்னும்
பெரும்புனல் சூடும் பிரான்சிவன் சிற்றம் பலமனைய
கரும்பன்ன மென்மொழி யாரும்அந் நீர்மையர் காணுநர்க்கே"

(திருக்கோவையார் - 248)

கலித்தொகையில் பாலைக்கலி ஒன்பதாம் செய்யுளின் கருத்தினையே மேலே காட்டிய செய்யுள் வலியுறுத்துகின்றது.

"பலவுறு நறுஞ்சாந்தம் படுப்பவர்க் கல்லதை
மலையுளே பிறப்பினு மலைக்கவைதா மென்செய்யு
நினையுங்கா ணும்மக ளுமக்குமாங் கனையளே
சீர்கெழு வெண்முத்த மணிபவர்க் கல்லதை
நீருளே பிறப்பினு நீர்க்கவைதா மென்செய்யுந்
தேருங்கா ணும்மக ளுமக்குமாங் கனையளே"

(கலித்தொகை—பாலைக்கலி - 9)

மாணிக்கவாசகனார் இயற்கையன்னையின் எழில் நலத்தைக் கண்டு இன்புற்றவர் என்பதற்கு இந்நூலில் பல

உதாரணங்கள் உள்ளன. மயிலின் முட்டையினைப் பாது காப்பவர் இல்லாமையால் குரங்கின் குட்டி அம்முட்டை யினை எடுத்துப் பந்தாடி விளையாடும் பெரிய சோலைகள் நிறைந்த நாட்டிற்குத் தலைவன் என நாயகனைப்பற்றித் தலைவி தோழியிடம் கூறுகின்றாள். இவ்வாறு வெளித் தோற்றத் திற்கு இயற்கையில் நடக்கும் நிகழ்ச்சியினை எடுத்துக் கூறினு ளேனும் தலைவியின் வார்த்தையில் சில குறிப்புப் பொரு ளாகிய உள்ளுறை உவமமும் காணக்கிடக்கின்றது. இனி அச்செய்யுளை நோக்குவோம்.

" வந்தாய் பவரையில் லாமயில் முட்டை இளையமந்தி
பந்தா டிரும்பொழில் பல்வரை நாடன்பண் போஇனிதே "

(திருக்கோவையார் - 276)

மேலே காட்டிய இயற்கை அழகு கீழ்க்காணும் குறுந்தொகைச் செய்யுள் ஒன்றிலும் காணக்கிடக்கின்றது.

" கான மஞ்ஞை யறையின் முட்டை
வெயிலாடு முசுவின் குருளை யுருட்டுங்
குன்ற நாடன்......" (குறுந்தொகை - 38)

இயற்கை அழகில் ஈடுபட்ட வாதவூரர் இந்நூலின் பிறிதோர் இடத்தில் " மல்லிகைப் போதின் வெண்சங்கம் வண்டூத " என்றார். இதில் வண்டினைச் சங்கு ஊதுவோனாகவும் மல்லி கைப் பூவினை வெண்சங்காகவும் கூறிய உவமை கண்டு இன்புறுதற்குரியதாகும்.

தலைவன் தனக்கு மணம் முடிந்தபின் சிறிது காலம் கழித்துக் கல்வி, போர், பொருள் ஈட்டல், பரத்தையைச் சேர்தல் முதலியவை காரணமாகத் தலைவியைப் பிரிதல் உண்டு. பரத்தையினிடம் சென்று மீண்டும் தலைவியிடம் வந்த தலை மகன் ஒருவன் அவளை நோக்கி " யான் நின்னைப் பிரிந்திருந்த காலத்தில் உன்னைத் தவிர வேறு ஒருத்தியையும் அறியேன் "

எனப் பொய் புகன்றான். அதைக் கேட்ட தலைவி " நின் பொய்யை யான் அறிவேன். நீ என்னைப் பிரிந்து சென்றிருந்த காலத்தில் ஒருநாள் தெருவில் தேர் உருட்டி விளையாடிக் கொண்டிருந்த நம் புதல்வனை நின் பரத்தை கண்டு நின் மகன் என ஐயம் கொண்டு தழுவ, யான் அதைக் கண்டு ' அம்மா நீ ஐயுறவேண்டாம். அவன் ஒரு முறையில் உனக்கும் மகனே. உன் உறவும் மெய்யாகிய உறவே. இதுவும் உனது இல்லமே ; இங்கே வருவாயாக ' என்று கூற, அது கேட்ட அப்பரத்தை நாணிப் போயினாள். நீ என்னைப் பிரிந்தபின் வேறு ஒருத்தியையும் காணவில்லையெனப் பொய் புகல வேண்டாம் " எனக் கூறித் தலைவி ஊடல் கொண்டனள் என்ற கருத்துடைய செய்யுளை நோக்குவோம்.

" ஐயுற வாய்நம் அகன்கடைக் கண்டுவண் தேருருட்டும்
மையுறு வாட்கண் மழலைத் தழுவமற் றுன்மகனே
மெய்யுற வாம்இதுன் இல்லே வருகென வெள்கிச்சென்றாள்
கையுறு மான்மறி யோன்புலி யூரன்ன காரிகையே "
(திருக்கோவையார் - 399)

இச்செய்யுளில் வந்துள்ள தலைவியின் பேச்சுத் திறமையும் ஊடல் நுணுக்கமும் கண்டு இன்புறுதற்குரியன. இச் செய்யுள் " பரத்தையர் சேரியினின்று வந்த தலைமகன் ' யாரையும் அறியேன் ' என்றானுக்குத் தலைமகள் சொல்லியது " என்ற துறையுள் வந்துள்ள " நாயுடை முதுநீர் " எனத் தொடங்கும் கீழ்க்காணும் அகநானூற்றுச் செய்யுளை ஒத்துள்ளது.

' நாயுடை முதுநீர்க் கலித்த தாமரைத்
தாதின் அல்லி அயலிதழ் புரையும்
மாசில் அங்கை மணிமருள் அவ்வாய்
நாவொடு நவிலா நகைபடு தீஞ்சொல்

யாவரும் விழையும் பொலந்தொடிப் புதல்வனைத்
தேர்வழங்கு தெருவில் தமியோற் கண்டே
கூரெயிற் றரிவை குறுகினள் யாவரும்
காணுநர் இன்மையின் செத்தனள் பேணிப்
பொலங்கலஞ் சுமந்த பூண்தாங் கிளமுலை
வருக மாளஎன் னுயிரெனப் பெரிதுவந்து
கொண்டனள் நின்றோட் கண்டுநிலைச் செல்லேன்
மாசில் குறுமகள் எவன்பே துற்றனை
நீயுந் தாயை இவற்கென யான்தன்
கரைய வந்து விரைவனென் கவைஇக்
களவுடம் படுநரில் கவிழ்ந்துநிலங் கிளையா
நாணி நின்றோள் நிலைகண் டியானும்
பேணினென் அல்லனோ மகிழ்ந வானத்(து)
அணங்கருங் கடவு ளன்னோள்நின்
மகன்தா யாதல் புரைவதாங் கெனவே" (அகம் - 16)

காதலனுக்கும் காதலிக்கும் உண்டாகும் ஊடல் மிகவும் நுணுக்கமானது என்பது சங்கச் செய்யுள்களான் அறியலாம்.

இனி, அக்காலப் பழக்க வழக்கங்களையும் இந் நூலில் வந்துள்ள சில பழமொழிகளையும் நோக்குவோம். ஆடவர் வீரக்கழல் அணிந்து வெள்ளாடை உடுப்பதும், பெண்கள் சிலம்பணிந்து செம்பட்டு உடுத்துவதும் அக்கால வழக்கமாகும். மடலூரும் தலைவன் தலைவியின் உருவத்தினை எழுதி முன்னே வைத்துக்கொள்வதினின்று பண்டைக் காலத் தமிழ்மக்கள் ஓவியம் எழுதும் ஆற்றல் பெற்றிருந்தனர் என்பது பெறப்படுகின்றது. தலைவன் போர்நிமித்தம் தலைவியைப் பிரிந்து அவளது இன்பத்தினும் போர் சிறந்ததாகக் கருதுவதால் பண்டைத் தமிழ்மக்களின் வீரம் புலனாகின்றது. கொல்லன் சேரியில் ஊசி விற்றல், முடவன் கொம்புத்

தேனுக்கு ஆசைப்படுதல், பேயுடன் பழகினும் பிரிதல் அரிது என்பன போன்ற பழமொழிகள் இந்நூலில் வந்துள்ளன. அவற்றினைக் கீழ்க்காணும் வரிகளில் காண்க.

" ஊசி கொற்சேரியின் விற்று " (336)

" கொடுங் குன்றின் நீள்குடுமி, மேற்றேன் விரும்பு
முடவனைப்போல மெலியு நெஞ்சே " (150)

" பேய்வயினும் அரிதாகும் பிரிவு " (343)

" முனிவரும் மன்னரும் முன்னுவ பொன்னூன் முடியும் " (332)

மாணிக்கவாசகர் பாடியருளிய திருக்கோவையாரிலும் திருவாசகத்திலும் சொல்லும் பொருளும் பல இடங்களில் ஒத்திருத்தல் காணலாம். சிவபெருமான் கடினமான கல்லாகிய மேருமலையையும் கனியும்படி செய்து திரிபுரம் எரித்த காலத்தில் அம்மலையை வில்லாக வளைத்தார். 'கல்லைக் கனியும்படி செய்த வித்தினைக் கற்றவராதலின் எனது மனமாகிய கல்லும் இளகும்படி செய்து அதனின்றும் அன்பு எனக்குத் தோன்றும்படிசெய்து பின்னர் என்னை அடிமையாகக் கொண்டார் ' என்ற கருத்துத் திருவாசகத்தில்,

" கல்லை மென்கனி யாக்கும் விச்சைகொண்(டு)
என்னை நின்கழற்(கு) அன்ப ணாக்கினுய்"—(திருச்சதகம் - 94)

" கல்நார் உரித்தென்னை யாண்டுகொண்டான் கழலிணைகள்
பொன்னுன வாபாடிப் பூவல்லி கொய்யாமோ "

(திருப்பூவல்லி - 9)

என்று கூறப்பட்டுள்ளது. இதே கருத்துத் திருக்கோவையாரில்,

" தெவ்வரை மெய்யெரி காய்சிலை யாண்டுஎன்னை யாண்டுகொண்ட
செவ்வரை மேனியன் சிற்றம் பலவன் "

(திருக்கோவையார் - 114)

என வருதல் காண்க.

திருக்கோவையாரின் சிறப்பினை உணர்ந்த ஔவையாராகிய அருந்தமிழ் மூதாட்டியார்,

" தேவர் குறளுந் திருநான் மறைமுடிவும்
மூவர் தமிழு முனிமொழியுங்—கோவை
திருவா சகமும் திருமூலர் சொல்லும்
ஒருவா சகமென் றுணர் "

எனப் பாராட்டியுள்ளனர். இலக்கணக்கொத்து ஆசிரியராய சுவாமிநாத தேசிகரும்,

" பல்காற் பழகினுந் தெரியா வுளவேல்
தொல்காப் பியந்திரு வள்ளுவர் கோவையார்
மூன்றினு முழங்கும் "

என இந்நூலின் சிறப்பைப்பற்றிப் போற்றியுள்ளனர். இத்துணைச் சிறப்புள்ள அகப்பொருட் சிறப்பினையும் பக்திச்சுவையினையும் தரவல்ல இச்சீரிய நூலினைத் தமிழ் நலம் சுவைக்கும் தமிழ் அறிஞர் போற்றிப் படித்துப் பயன்பெறுமாறு எல்லாம் வல்ல இறைவர் அருள் புரிவாராக.

# 5

# ஒரு சிறு கதை

பல நூற்றாண்டுகட்கு முன்னர் மக்கள் விலங்குகளைக் கொன்று அவைகளின் பச்சை ஊனினைப் பதம் பண்ணத் தெரியாது புசித்து வந்தனர். தம் ஊன் பெருக்கற்குத் தாம் பிறிதூனுண்ணும் மக்கள் இறைச்சியினை அவித்தல், வறுத்தல் முதலிய இன்னோரன்ன முறைகளை உணர்ந்தாரில்லை. ஊனைச் சமைக்கும் வகையை மாந்தர் எவ்வாறு அறிந்து கொண்டனர் என்பதை அடியிற்கண்ட கதையால் விளக்குவாம்.

சீன தேசத்தில் பெகின் என்ற சிற்றூரில் ஆதிரையன் என்பான் ஒரு சிறிய குடிசையில் வசித்து வந்தான். அவன் அநேக நாட்களாக வறுமைவாய்ப்பட்டு வருந்தினன். பன்றிக் குட்டிகளை மேய்த்து வருவதே அவனது தொழிலாகும். ஆதிரையனுக்குப் பத்து வயதுள்ள பகவன் என்ற ஒரு மைந்தன் உண்டு. பகவன் கூரிய அறிவும் சீரிய உணர்ச்சியும் வாய்ந்தவன். ஆனால் குறும்புத்தனத்தில் அவனினும் ஒப்பாரும் மிக்காருமில்லை என்று கூறுவது புனைந்துரையாகாது. பஞ்ச பூதங்களில் பகவனுக்கு நெருப்பைக் காண்பதில் விருப்பம் அதிகம். அவன் சில சமயங்களில் குச்சிகளையும் குப்பைகளையும் கொளுத்தி அதனாலுண்டாகும் தீயின் தன்மையினைக் கண்டு இன்புறுவான்.

ஒருநாள் ஆதிரையன் தன் பன்றிக்குட்டிகளுக்கு உணவு கொண்டு வருவதற்காக வீட்டைத் தன் மகன் பகவன் வசம் ஒப்புவித்து ஒன்பது பன்றிக்குட்டிகளையும்

பத்திரமாகப் பார்த்துக்கொள்ளும்படி சொல்லித் தான் காட்டிற்குச் சென்றனன். தந்தை காட்டிற்குச் சென்றதைக் கண்ட மைந்தன் கழிபேர் உவகை கொண்டு சில குச்சிகளையும் வைக்கோலினையும் ஒன்றுசேர்த்து அவைகளைக் கொளுத்தி அதனால் உண்டாகும் தீயின் ஒளியினைக் கண்டு களித்தான். அதுபோழ்து அத்தீயின் ஒரு சிறு பொறியானது குடிசையிற் புக, குடிசை முழுதும் பற்றி எரிந்தது. குடிசையில் தீப்புகுந்ததைக் கண்ட பகவன் வெளியே வந்துவிட்டான். சிறிது நேரத்திற்குள் குடிசை சாம்பலாய் விட்டது. இதைக் கண்ட பகவன் மிகவும் வருந்தினன். அவன் குடிசையை இழந்ததற்கு வருந்தவில்லை. ஏனெனில், அவன் இதற்குமுன் தன் குறும்புத்தனத்தால் இரண்டு குடிசைகளைத் தீவாய்ப்படுத்தியுள்ளான். ஆனல் அவன் "அந்தோ, பன்றிக் குட்டிகளைப் பறிகொடுத்தேனே!" என்று கதறினன். தன் தந்தையின் வெகுளியினைக் கணமேனும் காத்தலரிது என்றுணர்ந்த மைந்தன், "அந்தோ, பால்மணமாறாத இளம் பன்றிக்குட்டிகளை இழந்தேனே! எந்தை என்னை ஒறுப்பரே; யான் யாது செய்வேன்!" என்று வருந்தினன்.

அதுபோழ்து அவன் அக்குடிசையின் பக்கத்தில் ஒரு நறுமணம் வீசக்கண்டான். அந்த நறுமணம் எக்காரணத்தாலாயதென்றும் எப்பக்கத்தினின்று வீசுகின்றதென்றும் பகவன் உணர்ந்தானில்லை. அவன் அக் குடிசையின் நாற்புறமும் சுற்றிப்பார்த்தான். பார்த்தும் பயனில்லை. தான் பிறந்தது முதல் இதுவரையில் பகவன் இவ்வித நறுமணத்தைக் கண்டானில்லை. அச் சிற்றாருக்கு அது ஒரு புத்தம்புதிய நறுமணமாகத் திகழ்ந்தது.

பிறகு பகவன் பன்றிக்குட்டிகளின் அருகே சென்று, அவைகளின் ஆவி அகத்ததோ புறத்ததோ என்பதை உணர

வேண்டி அவைகளின் உடலைச் சிறிது தொட்டான். தொட்ட வுடன் தீப்பற்றிய குடிசையிலிருந்த பன்றிகளின் உடல் நன்ருக வெந்திருந்தபடியால் அவைகளின் கொழுப்பும் தசையும் பகவன் கையில் ஒட்டிக்கொண்டன. சுட்ட ஊனின் வெப் பத்தைத் தாங்கமாட்டாத பகவன் தன் விரல்களை உடனே வாயில் வைத்துக்கொண்டான். உடனே அவன் சுட்ட ஊனின் சுவையினை உணர்ந்தான். இதுகாறும் அக்குடிசையில் வீசிய நறுமணம் சுட்ட பன்றியிறைச்சியின்பாற்பட்டது என் பதை அறிந்து கொண்டான். இதுவரையில் அச்சிற்றூரில் வெந்த ஊனினைக் கண்ட மக்கள் ஒருவருமில்லை. முதல் முதல் அச்சிற்றூரில் சுட்ட பன்றியின் சுவையை யுணர்ந்த பகவன் கொண்ட மகிழ்ச்சிக்கு அளவேயில்லை. அவன் குதித்தான் ஆடினன். " நாடினேன், நாடி நான் கண்டுகொண்டேன் சுடு பன்றி இறைச்சியின் மாட்சி!" என்று பாடினன். பிறகு அப்பன்றியின் ஊனை உண்டு களித்தான்.

காட்டிற்குச் சென்ற ஆதிரையன் வீட்டிற்குத் திரும்பி வந்து குடிசை சாம்பலாகிய நிலையினையும், பன்றியின் ஊனுண் ணும் கழிபேர் இரையாளுகிய மைந்தனையும் கண்டு வெகுண்டு, அவனைத் தடியால் நையப் புடைத்தனன். அவன் அடித்த அடி சுட்ட பன்றி ஊனில் திளைத்திருக்கும் பகவனுக்கு ஈ மொய்த்தது போன்றிருந்தது. அவன் தன் தந்தை வந்ததை யும் கண்டானில்லை.

ஆதிரையன்:—அடே, விலங்கே! அங்கே என்ன செய் கின்ருய்? இதுகாறும் மூன்று குடிசைகளை அழித்தது போதாதென்று கருதியோ இக்குடிசையினையும் தீவாய்ப் படுத்தினை?

பகவன்:—என் அருமைத் தந்தையே! ஆ ஆ! என்ன அருமை! என்ன அருமை! இப்பன்றிகளின் அமிழ்தினு

யினிய சுட்ட இறைச்சியினை யான் என்னவென்று கூறு வேன்! தயவுசெய்து தாங்களும் இச்சுட்ட ஊனினைச் சாப்பிடுங்கள்.

ஆதிரையனுக்கு அடங்காக் கோபம் பொங்கி வந்தது. அவன் மறுபடியும் தன் மைந்தனின் அரக்கத்தன்மைக்கு வருந்தி அவனை மீண்டும் வைதான். தான் பெற்ற இன்பம் தன் தந்தையும் பெறுதல் வேண்டுமென்ற பேராவாக்கொண்ட மைந்தன் மிக்க சூடாக உள்ள அப்பன்றி ஊனினை விரைவு டன் தன் தந்தையின் கையில் வைத்தான். ஆதிரையன் உடனே திடுக்கிட்டு அவ்வூனைக்கொண்ட விரலின் சூட்டைத் தாங்கமாட்டாது யாதுசெய்வதென்று தெரியாது வருந்தினன். பிறகு அவனுக்கு ஒரு யுக்தி பிறந்தது. அவன் விரல்களைக் குளிர்ச்சி செய்யும் வண்ணம் வாயில் வைத்துக்கொண்டான். இதுகாறும் பன்றியின் வெந்த ஊனின் தன்மையைக் கன விலும் கண்டும் கேட்டுமறியாத ஆதிரையன் கொண்ட உவ கைக்கு அளவேயில்லை. அவன் தன்னை மறந்தான். தன் உடலையும் மறந்தான். சுருங்கக் கூறுமிடத்து இவ்வுலகத்தை யும் மறந்தான். பிறகு மிகுந்த மகிழ்ச்சியுடன் அவனும் அவன் மைந்தனும் பன்றியின் சுட்ட ஊனினைச் சுவைபட உண்டு களித்தனர்.

அக்காலத்தில் அச்சிற்றூரிலுள்ள மக்கள் அனைவரும் பச்சை ஊனினைப் புசித்துவந்தனர். அந்நிலையிலுள்ள மாந்தர் வெந்த ஊனின் மணத்தையும் தன்மையையும் உணரார். ஆகவே ஆதிரையனும் அவன் மகனும் பன்றியைச் சுடும் வகையை அச்சிற்றூரிலுள்ள மற்ற மக்களுக்கு உணர்த்தினா ரில்லை. தீப்பற்றிய வீட்டினால்தான் பன்றி இறைச்சியைச் சுட்டுத் தின்னலாம் என்று கண்ட தந்தையும் மைந்தனும் அடிக்கடி தங்கள் குடிசையில் பன்றிக்குட்டிகளை உள்ளே

அடைத்துக் குடிசையைக் கொளுத்திவிட்டு வெளியே வந்து குடிசை முற்றும் எரிந்தபின் உள்ளே சென்று பன்றிகளின் வெந்த ஊனினைத் தின்று மகிழ்ந்துவந்தனர். இவ்வாருக அவர்கள் தாங்கள் குடியிருந்த குடிசையில் பன்றியை உள்ளே விட்டு அக்குடிசையினைச் சிலமுறை பகலிலும் பலமுறை இரவிலும் தீவாய்ப்படுத்தி அதனுல் உண்டான பயனைப் பெற்றனர். வீடுபற்றி எரிந்தால்தான் பன்றியின் ஊன் பதமாகும் என்றதோர் புதிய முடிவை அவர்கள் கண்டுபிடித்தனர்.

இவர்கள் குடிசை இவ்வாறு பலமுறையும் தீவாய்ப்படுவதைக்கண்ட மற்ற மக்கள் ஆதிரையனும் அவன் மகனும் செய்துவந்த காரியத்தை ஒரு நாள் கண்டுபிடித்து விட்டனர். உடனே அவர்கள் ஆதிரையன் செய்யும் காரியம் அடாது என்று கூறி அவனையும் அவன் மகனையும் நீதி மன்றத்தில் கொண்டுபோய்ச் சேர்த்தனர்.

அன்று ஊரிலுள்ள மக்கள் அனைவரும் வேடிக்கை பார்ப்பதற்காக நீதி மன்றத்தில் வந்து நிறைந்தனர். குறித்த நேரத்தில் நீதிபதியும் தம் இடத்தில் வந்து அமர்ந்தார். நீதிபதி தாம் தீர்ப்புச் சொல்லும் முன்னர் ஆதிரையன் குற்றவாளியோ அல்லனே என்பதைப்பற்றி அங்குள்ள நடுவுநிலையாளரின் (ஜூரிகளின்) கருத்தினைக் கேட்டார். அங்குள்ள நடுவுநிலையாளருள் ஒருவர் அச்சுட்ட பன்றியின் ஊனினைப் பார்த்து அதிலுள்ள குற்றத்தைக் கண்ட பின்னரே தீர்ப்புச் சொல்லுவது சாலச் சிறந்தது என்ருர். அவ்வாறே நடுவுநிலையாளர் அனைவரும் பன்றியின் சுட்ட ஊனினைத் தொட அச்சூட்டினைத் தாங்கமாட்டாத அவர்களும் தங்கள் விரலினைக் குளிர்ச்சி செய்யும் வண்ணம் வாயில் வைத்துக்கொண்டனர். அவர்களும் சுட்ட இறைச்சியின் மாட்சியை உணர்ந்தனர். அதனுல் உடனே அவர்கள் ஆதிரையன் குற்றமற்றவன்

என்று நீதிபதியிடம் கூற அவரும் அவ்வாறே தீர்ப்புக் கூறினார்.

நடுவுநிலையாளர் அனைவரும் ஆதிரையன் குற்ற மற்றவன் என்று ஒருமனப்பட்டுச் சொல்வதற்கு ஏதாவது காரணம் இருக்கவேண்டுமென்று நீதிபதி யூகித்து அறிந்து கொண்டார். பிறகு அவர் ஒரு தனியிடத்திற் சென்று அந்தச் சுட்ட இறைச்சியினைத் தாமும் தொட அச்சூட்டினைப் பொறுக்கமாட்டாது தாமும் தம் விரல்களைக் குளிர்ச்சி செய் யும்வண்ணம் வாயில் வைத்துக்கொண்டார். உடனே அவரும் சுட்ட ஊனின் உண்மையையும் தன்மையையும் அறிந்து வீட்டை எரித்தால்தான் பன்றியின் ஊனைச்சுட்டுத் தின்ன லாம் என்ற முடிவை அறிந்துகொண்டார். மறுநாள் நீதிபதி வீட்டிலும் தீப்பற்றி எரிந்தது. அவரும் தம் வீட்டில் பன்றியை உள்ளே வைத்து வீட்டைக் கொளுத்தி அதனா லுண்டாகிய சுட்ட பன்றி இறைச்சியை உண்டு உவந்தனர். வீட்டைச் சுட்டால்தான் பன்றியின் வெந்த ஊனினைத் தின்னலாம் என்பதை அச்சிற்றூரிலுள்ள மக்கள் அனைவரும் அறிந்துகொண்டனர். அன்று முதற்கொண்டு அவ்வூரில் ஒவ்வொரு வீடும் பற்றி எரிந்தது. விறகின் விலையும் பன்றிக் குட்டிகளின் விலையும் உயர்ந்துவிட்டன. ஒவ்வொருநாளும் சுமார் ஐம்பது வீடுகள் தீவாய்ப்பட்டன.

பிறகு கொஞ்ச நாட்கள் சென்றவுடன் வேற்றூரிலுள்ள ஒருவர் அச்சிற்றூருக்கு வந்துசேர்ந்தார். அம் மக்களின் அறியாமையைக்கண்ட அவர் அவ்வூரிலுள்ள மக்களுக்குப் பன்றியின் இறைச்சியையும் மற்ற விலங்குகளின் இறைச்சி யினையும் சுடும் விதத்தினை எடுத்து விளக்கினார். பன்றி இறைச்சியினைப் பதம் செய்வதற்கு ஒரு வீட்டை முழுதும் எரிக்கவேண்டிய அவசியமில்லை யென்றும், அடுப்பில் வைத்து

ஊனைச் சுடலாமென்றும் கூறி அம்மக்களுக்கு அறிவுறுத்தினர். பின்னர் நாகரிகம் முற்றியவுடன் எல்லா மக்களும் பன்றி இறைச்சியினையும் மற்ற விலங்குகளின் இறைச்சியினையும் எம்முறையில் வேகவைத்தல், வறுத்தல், சமைத்தல் என்பன போன்ற முறைகளை உணர்ந்துகொண்டனர்.

பன்றிக் குட்டிகளின் அழகே அழகு! அவைகளுக்குப் பொய் சொல்லத் தெரியாது. புறங்கூறத் தெரியாது. அவைகள் யானைக் குட்டிகள்போல் நடக்கும் நடையினை வியவாதார் உளரோ! *இக்கட்டுரை (Charles Lamb) சார்லஸ் லாம் என்ற ஆங்கில ஆசிரியர் ஆங்கிலத்தில் எழுதிப்போந்த (A dissertation upon roast pig) "சுட்ட பன்றி" என்ற கட்டுரையினைத் தழுவியதாகும்.

# 6

## சூளாமணி

தமிழ் இலக்கியத்தில், பெருங்காவியம் சிறுகாவியம் என இருவகை உண்டு. சீவகசிந்தாமணி, சிலப்பதிகாரம், மணிமேகலை, குண்டலகேசி, வளையாபதி என இவை ஐந்தும் ஐம்பெருங்காவியம் என வழங்கப்பெறும். யசோதர காவியம், சூளாமணி, நாககுமார காவியம், உதயண காவியம், நீலகேசி என இவை ஐந்தும் ஐஞ்சிறு காவியங்கள் எனப்படும். சூளாமணி என இந்நூலுக்குப் பெயர் வரக் காரணம் யாது என்பதை நோக்குவோம். சூளாமணி என்பது ஒரு தெய்வமணியெனப் பிங்கல நிகண்டில் குறிக்கப்பட்டுள்ளது. நினைத்ததைத் தரவல்ல அத்தெய்வமணியைப்போலச் சமண சமயத்தினர் வேண்டிய பொருளை வேண்டியாங்கு இந்நூலால் பெறுவர் என்பதால் இந்நூல் சூளாமணி எனப் பெயர் பெற்றது. இது தன்மையால் வந்த பெயராகும். முதல் நூலைப் பற்றிப் பேசும் நன்னூல் சூத்திர உரையில் மயிலைநாதர் "தன்மையாற் பெயர் பெற்றன சிந்தாமணி, சூளாமணி, நன்னூல் முதலியன" என்பர். சூளாமணி என்பது தலையில் அணியும் ஒருவகை அணியாதலின் யாவரும் தலைமேல் கொள்ளத்தக்கது இந்நூல் என்ற கருத்தில் இது சூளாமணி எனப் பெயர் பெற்றது எனக் கூறுவாருமுளர். சிந்தாமணியின் காவியத் தலைவனாகிய சீவகன் பிறந்தவுடன் அவன் தாய் அவனைச் "சிந்தாமணி" எனப் பாராட்டினமையான் அந்நூல் சிந்தாமணி எனப் பெயர் பெற்றதுபோல், சூளாமணியின் காப்பியத் தலைவனை பயாபதி "துளங்காது உயர்ந்து உலகின் முடிக்கு ஓர் சூளாமணியானான்" எனப் பாராட்டப் பட்டுள்ளதாலும், "மஞ்சுசூழ் மலைக்கோர் சூளாமணி

யெனக் கருதுமன்றோ " எனச் சூளாமணி என்ற சொல் பிற இடங்களிலும் வருவதாலும் இந்நூல் சூளாமணி எனப் பெயர் பெற்றது என்றும் கூறுவர்.

இந்நூல் தோலாமொழித்தேவர் என்ற சமண சமய முனிவரால் இயற்றப்பட்டதாகும். இப்பெயர் அவரது இயற் பெயரோ அன்றிக் காரணப் பெயரோ என ஐயுறுதற்கு இட மாக உள்ளது. தோல்வி அடையாத என்ற பொருளைக் கொண்ட "தோலா" என்ற சொல்லினை இவர் தமது நூலில் " ஆர்க்கும் தோலாதாய் " என்றும் " தோலா நாவிற் சுச்சு தன் " என்றும் சில இடங்களில் குறிப்பிட்டுள்ளதால் இவ ருக்குத் தோலாமொழித்தேவர் எனப் பெயர் வந்தது என்பர். தமது நூலில் தாம் குறிப்பிட்ட சொற்களாலும் உவமை யாலும் பெயர் வழங்கப்பெறும் சங்கப் புலவர்களும் உண்டு. குறுந்தொகையிற் காணும் பாடினோர் வரிசையில் ' அணிலாடு முன்றிலார் ' ' செம்புலப்பெய்நீரார் ' என்ற புலவர் தாம் பாடிய பாக்களுள் கூறியுள்ள உவமையால் பெயர் பெற்றனர். திரு. K. S. சீனிவாசப் பிள்ளை அவர்கள் தாம் எழுதிய " தமிழ் வரலாறு " என்ற நூலில் " தோலாமொழி என்பது ஆசிரியருக்குப் பிற்காலத்து வந்த பட்டப் பெயர் எனத் தோன்றுகின்றது. ' ஸ்ரீவர்த்த தேவர் ' என்பது அவரது பெயராயிருக்கலாம் " என்பர். " மைசூர் அரசாங்கத்தைச் சேர்ந்த சிரவண பெல்கோலா என்றவிடத்துக் காணப்படும் கல்வெட்டொன்றில் சிந்தாமணி, சூளாமணி என்ற இரு நூல்களின் ஆசிரியர்களைப்பற்றிய குறிப்புக்கள் காணப்படு கின்றன." (Ep. Ind. Vol. iiip. 190-1) (cf. சூளாமணிச் சுருக்கம்—திரு. ஔவை. துரைசாமிப் பிள்ளை முன்னுரை). இக்கல்வெட்டில் காணும் குறிப்புக்களால் ஆசிரியர் தோலா மொழித்தேவரின் இயற்பெயர் ஸ்ரீவர்த்த தேவர் என்பது பெறப்படுகின்றது. இந்நூல் நெடுஞ்சேந்தனது அவைக்

களத்தில் அரங்கேற்றப்பட்டது என்பது இந்நூல் பாயிரத்தால் காணலாகும். இவரது காலம் கி. பி. 7-ஆம் நூற்றாண்டு எனச் சிலர் கூறுவர். கி. பி. 9-ஆம் நூற்றாண்டின் பிற்பகுதி எனக் கூறுவாருமுளர். இவரது காலத்தைப் பற்றிய ஆராய்ச்சியின் விரிவினைச் 'சூளாமணிச் சுருக்கம்' என்ற நூலின் முன்னுரையிற் காண்க.

இந்நூல் கடவுள் வாழ்த்தும் பாயிரமும் அமையப் பெற்று நாட்டுச் சருக்கம் முதல், முத்திச் சருக்கம் ஈறாகப் பன்னிரு சருக்கங்களாக வகுக்கப்பட்டு 2131 பாக்களைத் தன்னகத்தே கொண்டுள்ளது. புறத்திரட்டின்மூலம் மூன்று புதிய பாடல்களும் கிடைத்துள்ளன. இனி, இக்காவியத் தலைவனை பயாபதியின் வரலாற்றினை நோக்குவோம். பயாபதி என்பான் சுரமை நாட்டில், போதனமா நகரத்தைச் சிறக்க ஆண்டு வந்தனன். அவனது பட்டத்துத் தேவியரான மிகாபதி, சசி என்பவர்களிடத்து முறையே விசயன், திவிட்டன் என இரு குமாரர்கள் பிறந்தனர். அவர்கள் உரிய பருவத்தே கல்வி, ஒழுக்கம், படைக்கலப் பயிற்சி முதலியவற்றில் சிறந்து விளங்குவதைக் கண்ட மன்னன் கழிபேர் உவகை கொண்டான். இரத்தினபல்லவத்திலிருந்து அரசாண்ட விஞ்சையர் வேந்தனை அச்சுவகண்டன் என்பவனது ஆணைக்கு அஞ்சிப் பயாபதி மன்னன் அவ்வச்சுவகண்டனுக்குத் திறைப்பொருள் கொடுத்தனுப்ப, அதைக் கண்ட திவிட்டன் அவைகளைத் தடுத்துவிட்டனன். இதனைத் தூதுவர் மூலம் உணர்ந்த அச்சுவகண்டனின் அமைச்சன் அரிமஞ்சு என்பான் திவிட்டனைக் கொல்ல, ஒரு மாயசிங்கத்தை ஏவ, திவிட்டன் அதனை அழிக்கத் துரத்திச் செல்ல, அம்மாய சிங்கம் ஒரு மலைக் குகையில் மறைந்துவிட்டது. திவிட்டனது ஆரவாரத்தைக்கேட்ட அக்குகையிலிருந்த உண்மைச் சிங்கமொன்று வெளியே வர, திவிட்டன் அதைக் கொன்றனன்.

சேடி நாட்டில் இரதநூபுரம் என்ற நகரத்தை அரசாண்டு வந்த விஞ்சையர் வேந்தனான சுவலனசடி என்பான் திவிட்டனது வீரச் செய்கைகளைக் கேள்வியுற்றுத் தன் மகள் சுயம்பிரபை என்பாளைத் திவிட்டனுக்கு மணம் செய்வித்தனன். திவிட்டன் திறை செலுத்த மறுத்ததனையும், சுயம்பிரபையை மணந்து கொண்டதனையும் அறிந்த விஞ்சையர் வேந்தனான அச்சுவகண்டன் மிக வெகுண்டு தனது படைவீரருடன் திவிட்டனை எதிர்க்க, வீரமிக்க திவிட்டன் அச்சுவகண்டனையும் அவனுடன் வந்த வீரரையும் கொன்று குவித்தனன். பின்னர்ப் பயாபதி மன்னன் தனது இரு மக்களாகிய திவிட்டனுக்கும் விசயனுக்கும் பட்டம் சூட்டி மகிழ்ந்தான். திவிட்டன் தனது மகள் சோதி மாலைக்குச் சுயம்வரம ஏற்படுத்த அதில் திவிட்டனது மைத்துனன் அருககீர்த்தி என்பானது மகனை அமிததேசனுக்கு அவள் மாலை சூட்டினாள். அவ்வாறே அருககீர்த்தி தன் மகள் சுதாரைபொருட்டு ஏற்படுத்திய சுயம்வரத்தில் திவிட்டன் மகனை விசயனுக்குச் சுதாரை மாலைசூட்டினாள். பின்னர் அத்திருமணங்கள் இரண்டும் சிறக்க நடைபெற்றன. இவ்வித நிகழ்ச்சிகள் அனைத்தையும் கண்டு களித்த பயாபதி மன்னன் அவைகள் நிகழ்தற்குக் காரணம் தான் முற்பிறப்பில் பண்ணிய புண்ணியத்தின் பயன் எனக் கருதி, அத்தகைய புண்ணியத்தை மீண்டும் பெறுவான் வேண்டி ஒரு முனிவரை அடுத்து உபதேசம் பெற்றுத் துறவு பூண்டு, மெய்யுணர்ந்து சிவகதியுள் நிற்க, இமையவர் போற்றினர். இறுதியில் பயாபதி மன்னன் தனது கேவலப் பேரொளியால் "உலகின் முடிக்கு ஓர் சூளாமணியாய்" விளங்கினான். இதுவே இந்நூலிற் கண்ட வரலாற்றின் சுருக்கமாகும்.

"விஞ்சைக்கு இறைவன்" எனத் தொடங்கும் இந்நூல் பாயிரச் செய்யுளைக்கொண்டு இதற்கு முதல்

நூல் ஆருகத மாபுராணம் என்பர். இந்நூலாசிரியர் திருக்குறள், சிந்தாமணி முதலிய சங்க நூல்களுள் காணக்கிடக்கும் கருத்துக்களையும், சொற்களையும், சொற்றொடர்களையும் தம் நூலில் கையாண்டுள்ளனர். உதாரணமாக,

" அருளில்லார்க்(கு) அவ்வுலக மில்லை பொருளில்லார்க்(கு)
இவ்வுலகம் இல்லா கியாங்கு "

என்ற திருக்குறளின் கருத்தை,

" பொருளிலார்க்(கு) இவ்வழிப் பொறியின் போகமும்
அருளிலார்க்(கு) அறத்தினும் பயனும்......"
(சூளாமணி - முத்திச் சருக்கம் - 13)

என்றும்,

" மயிர்நீப்பின் வாழாக் கவரிமா வன்னார்
உயிர்நீப்பர் மானம் வரின் "

என்ற குறளின் உவமையினை,

" மான மாமணி வீழ்த்(து) உயிர்க்கு, ஊன மாம்என ஓடுவீர்
ஈன வார்மயிர்க்கு ஏதமாம், கான மாவது காணுமே "
(சூளாமணி - அரசியற் சருக்கம் - 227)

என்றும் இந்நூலாசிரியர் கூறுதல் காண்க. சிந்தாமணியில் துறவு நிலையைக் கொண்டிருந்த சீவகனை ஆசிரியர் திருத்தக்க தேவர் " சூளாமணியாய்ச் சுடர இருந்தான் " (சிந்தாமணி 3037) என்பதையும், பயாபதி மன்னனின் துறவறத்தைக் கூறவந்த இந்நூலாசிரியர் " உலகின் முடிக்கு ஓர் சூளாமணி யானான் " (சூளாமணி - முத்திச் சருக்கம்—59) எனக் கூறுவதையும் ஒப்பிட்டு நோக்குக.

இந்நூலில் கூறப்பட்டுள்ள திவிட்டனும் விசயனும் நிறம், குணம், செயல் முதலியவற்றால் முறையே கண்ணனையும் கண்ணன் அண்ணனாகிய பலராமனையும் ஒத்துள்ளனர். ஆசிரியர் திவிட்டனைக் குறிப்பிடும்போது " கடலொளி மணி

வண்ணன் ” (குமார காலச் சருக்கம்—12) என்றும், விசயனைக் குறிப்பிடும்போது “வார்வளை வண்ணன்” (குமார காலச் சருக்கம்—13) என்றும் கூறுவதைக் காண்க. கஞ்சன் கண்ணனைக் கொல்லும் பொருட்டு ஏவிய குவலயாபீடம் என்ற யானையைக் கண்ணன் கொன்றான். அச்சுவகண்டன் அமைச்சன் அரிமஞ்சு என்பான் திவிட்டனைக் கொல்லும்பொருட்டு ஏவிய மாய சிங்கத்தைத் திவிட்டன் துரத்தி அடித்து உண்மையாகத் தோன்றிய சிங்கத்தைக் கொன்றான். கண்ணன் பலராமன் முதலியோருடன் சென்று வாணாசுரனைக் கொன்றதுபோல் திவிட்டன் விசயன் முதலியோருடன் சென்று அச்சுவகண்டனைக் கொன்றான். கண்ணன் மழையைத் தடுப்பதற்குக் கோவர்த்தனகிரியைக் குடையாக ஏந்தினான். திவிட்டன் புராணநூற் புலவர் கூறிய வரலாற்றின்படி கோடிக்குன்றம் என்ற குன்றினை எடுத்தான்.

ஆசிரியர் தோலாமொழித்தேவர் இந்நாலில் அரசு, குடிமக்கள் இயல்பு,அமைச்சர் பண்பு,தூதின் இலக்கணம்,இல்லற வாழ்க்கை முதலியவற்றை நன்கு விளக்கியுள்ளனர். இவர், “ கண்ணெனப்படுவ மூன்று : காவலர் கல்வி காமர், விண்ணினைச் சுழல ஓடும் வெய்யவன் ” (மந்திரசாலைச் சருக்கம்—30) என்றதால் காவலன்,கல்வி, விண்ணிடை விளங்கும் வெய்யோனாகிய ஞாயிறு ஆகிய மூன்றும் உலகத்திற்கு மூன்று கண்களாக உள்ளன என்பது பெறப்படுகின்றது. புற இருளைப் போக்குதலின் ஞாயிறு மக்களுக்குக் கண்போன்றதாகும். “ கண்ணுடையர் என்பவர் கற்றோர் ” என்பதற்கேற்பக் கல்வி மக்களுக்கு அறியாமையைப் போக்கி அறிவு கொளுத்துவதால் அதுவும் ஒரு கண்ணாக விளங்குகின்றது. மாநிலங் காவலனாகிய மன்னவன் மன்னுயிர்க்கு உண்டாகும் ஐந்து பயங்களையும் போக்கி அரசாள்வதால் அவனும் மக்களுக்குக் கண்போன்றவன் ஆகின்றான். பயாபதி மன்னனது ஆட்சியால்

அகமகிழ்ந்த குடிமக்கள் தாமாகவே தமது வருவாயுள் ஆறில் ஒரு பகுதியை இறைவனுக்குக் கொடுத்தனர் என்பது " ஆறில் ஒன்று அறம் என அருளின் அல்லது ஒன்று, ஊறு செய்து உலகினின் உவப்பதில்லையே " (நகரச் சருக்கம்—19) என்பதனால் அறியக்கிடக்கின்றது. அரசனாகிய இயந்திரத்திற்கு அமைச்சர் கண்ணாகவும், குடிமக்கள் கால்களாகவும், தோழர் தோள்களாகவும், ஒற்றர் செவிகளாகவும், நூல் மெய்யறிவாகவும், தூதுவர் வாயாகவும் விளங்குவர் எனக் கவி கூறுதலைக் கீழ்வரும் செய்யுளில் காண்க.

மந்திரக் கிழவர் கண்ணா மக்கள்தன் தாள்க ளாகச்
சுந்தர வயிரத் திண்தோள் தோழராச் செவிகள் ஒற்றா
அந்தர உணர்வு நூலா அரசுஎனும் உருவு கொண்ட
எந்திரம் இதற்கு வாயாத் தூதுவர் இயற்றப் பட்டார்.

(சூளாமணி - தூதுவிடுசருக்கம் - 135)

மக்கட்பேற்றின் சிறப்பினையும் ஆசிரியர் இந்நூலில் எடுத்துக் காட்டியுள்ளனர். மலரற்ற சோலையும், தாமரையற்ற பொய்கையும், திங்கள் அற்ற வானமும் சிறப்பில்லாதன போல் மக்கள் அற்ற மனையானது சிறப்பற்றதாகும். (மந்திரசாலைச் சருக்கம்—175) " மக்களைப் பெறுதல் மாதரார்க்கு ஆழ்ம்நீர் வையகத்து அரியதாவதே " (மந்திரசாலைச் சருக்கம்—177) என்றும், "இன்நகைப் புதல்வர் செல்வம் யாவரே இனிது என்னாதார்" (சுயம்வரச் சருக்கம்—75) என்றும் கவி கூறுவதைக் காண்க. இல்லறமாகிய ஒரு கற்பக மரத்திற்கு, தலைவன் மரத்தின் அடியாகவும், மனையாள் அம்மரத்தின் கிளையாகவும், மக்கள் மலர்களாகவும், சுற்றத்தார் வண்டுகளாகவும் ஆசிரியர் உருவகித்துக்காட்டுவது சாலவும் இன்புறுதற்குரியதன்றோ! (மந்திரசாலைச் சருக்கம்—176) தம் மகளின் நலத்திற்கேற்ற மணாளனைத் தேடுதல் பெற்றோர் கடமையாகும். பொன்னின் நடுவே பதித்தற்குரிய மாணிக்

கத்தை ஈயத்தின் நடுவே பதித்தாலும் அது மாட்டேன் என மறுக்காவிடினும் அதன் அழகு சீர்கெட்டுப்போகும். (இரதநூபுரச் சருக்கம்—112) அதேபோல் ஒரு பெண்ணும் பெற்றோர் தேர்ந்தெடுத்த ஆடவன் தனக்கு விருப்பமில்லையாயினும் வேண்டாம் என மறுக்காது அவளது விதியை நொந்து கொள்வாள். எனவே மகளிர்க்கு மணாளனைத் தேடும் பெற்றோர் பொறுப்பு மிகப் பெரியதாகும் என ஆசிரியர் (இரதநூபுரச் சருக்கம்—113) கூறுவதினின்று ஆசிரியரின் உலகியல் ஞானம் நன்கு புலனாகின்றது.

இந்நூலாசிரியர் சமணராதலின் இந்நூலில் அறன் வலியுறுத்தல், செல்வநிலையாமை, கொல்லாமை, யாக்கை நிலையாமை, துறவு முதலியவற்றை மிக்க திறம்பட, நயம்பட விளக்கியுள்ளனர். உணவின்றி வாடி வதங்கிக் கிடக்கும் ஏழை மக்கள்மீது இரக்கம் கொண்டு அவர்களுக்கு உண்டி முதலியன கொடுத்து உதவிய ஒருவன் அவ்வறத்தின் பயனால் மறுமையில் அரச பதவியை எய்துவன் என இந்நூலில் கூறப்பட்டுள்ளது.

“ கடைநின் றவர்உறு கண்கண்(டு) இரங்கி
உடையதம் ஆற்றலின் உண்டி கொடுத்தோர்
படைகெழு தானையர் பல்களி யானைக்
குடைகெழு வேந்தர்க ளாகுவர் கோவே ”

(சூளாமணி - துறவுச் சருக்கம் - 158)

அறத்தின் சிறப்பினை எடுத்துக் கூறவந்த திருத்தக்கதேவர் சிந்தாமணியுள் கூறுவது ஈண்டு நோக்கத்தக்கது.

“ திருந்திய நல்லறச் செம்பொற் கற்பகம்
பொருந்திய பொருளொடு போகம் பூத்தலால்
வருந்தினும் அறத்திறம் மறத்த லோம்புமின்
கரும்பெனத் திரண்டதோள் கால வேற்கணீர் ”

(சிந்தாமணி - முத்தி - 337)

இவ்வறன் வலியுறுத்தலைப்பற்றி, பௌத்த சமய ஆசிரியராகிய சீத்தலைச் சாத்தனார்,

" மிக்க நல்லறம் விரும்பாது வாழும்
மக்களிற் சிறந்த மடவோ ருண்டோ "
(மணிமேகலை - 6 : 103 - 104)

" இளமையும் நில்லா யாக்கையும் நில்லா
வளவிய வான்பெருஞ் செல்வமும் நில்லா
புத்தே ளுலகம் புதல்வரும் தாரார்
மிக்க அறமே விழுத்துணை யாவது "
(மணிமேகலை - 22 : 135 - 138)

என நம் உள்ளத்திற் பதிய உரைத்தல் காண்க.

தோலாமொழித்தேவர் இந்நூல் முத்திச் சருக்கத்தில் செல்வநிலையாமையைப் பற்றிக் கூறுவர். சிறிதும் கண்ணோட்டமின்றிப் பொருள் அற்றவரை விட்டு நீங்கும் பொது மகளிர் போல், ஒருவனிடத்துப் புண்ணியம் குறைந்தபோது திருமகள் அவனை விட்டு நீங்குவாள். (முத்திச் சருக்கம் 5) அவள் கற்றவர் தம்மையும் கழற நோக்குவாள். " ஆதலால் அவள் திறத்து அன்பு செய்யன்மின் " என ஆசிரியர் கூறுவதை நாம் மறத்தல் ஆகாது. எனவே செல்வம் நிலையற்றது என்பது பெறப்படுகின்றது.

" செல்வம் நமரங்காள் நினையன்மின் செய்தவமே
நினைமின் கண்டீர் " (சிந்தாமணி—2623)

" நண்ணன்மின் செல்வம் நமரங்காள் நல்லறமே
நினைமின் கண்டீர் " (சிந்தாமணி—2625)

எனத் திருத்தக்கதேவர் குறிப்பிடுவது ஈண்டுச் சிந்திக்தற்குரியதாகும்.

" ஒன்றாக நல்லது கொல்லாமை " என்ற வள்ளுவரின் வாய்மொழிக்கு ஏற்ப, சமண சமயத்தினர் எல்லா அறங்களுள்ளும் கொல்லாமை என்பதனைத் தலையாகக் கொண்

டுள்ளனர் என்பது அவரது நூல்களான் அறியக்கிடக்கும் உண்மையாகும்.

"கொன்றுயிர் நடுங்கச் சென்று கொலைத்தொழில் கருவி யேந்தி
நின்றெறி நடங்கு கண்ணால் பாவமே நினைந்து செத்தார்
சென்றெறி நரகில் வீழ்வர் செவ்வனே துன்ப மஞ்சி
நன்றியில் கொலையின் நீங்கி நற்றவம் புரிமின் என்றான்"

(சூளாமணி)

"கொலையின் நீங்குமின் கொண்மின் உலகினுள்
தலைவன் நல்லறம் தக்க தெனஉவந்(து)
அலையின் நீங்கிய அவ்வுல(கு) எய்துதல்
முனைவர் சொன்ன முடிவிது வாகுமே" (சூளாமணி)

இவ்விரு செய்யுட்களும் புறத்திரட்டில் வெளிவந்த செய்யுட்களாம். இவை திரு. தாமோதரம் பிள்ளை பதிப்பித்த சூளாமணியில் காணப்படவில்லை. இச்செய்யுட்களில் ஆசிரியர் கொலைத்தொழில் புரிபவன் நரகில் வீழ்வான் என்பதையும், ஆதலால் ஒருவன் அக்கொலைத் தொழிலினின்றும் நீங்கி நல்லறம் புரிந்து நற்றவம் இயற்றுமேல் வீட்டின்பத்தைப் பெறலாம் என்பதையும் குறிப்பிடுகின்றனர். நரககதி, விலங்குகதி, மக்கள்கதி, தேவர்கதி என நால்வகை கதிகளின் இயல்பும் இந்நூலில் கூறப்பட்டுள்ளது.

இவ்வுலக வாழ்க்கை நிலையற்றது என்பதையும் இவ்வாழ்க்கையில் நாம் பெறும் இன்பம் மிகச் சிறிதேயாம் என்பதையும் ஆசிரியர் ஓர் உவமை வாயிலாக விளக்கிக் காட்டுகின்றனர். ஒருவன் காட்டில் வழிதப்பி அங்கும் இங்கும் ஓடுகின்றான். ஒரு மதயானை அவனைத் துரத்தி வருகின்றது. அதற்கு அஞ்சி அவன் ஒரு பாழடைந்த கிணற்றில் இறங்குகின்றான். புதர்கள் அடர்ந்த அக்கிணற்றினுள்ளே இருந்து ஒரு கொடிய பாம்பு அவன்மீது சீறிக்கொண்டு வருவதைக் கண்டு கிணற்றின் வெளியே வரலாமென்று நினைத்தான். ஆனால் மதயானையோ அவனைக் கொல்லும்பொருட்டு வெளியில்

காத்துக் கொண்டிருந்தது. ஆகவே அவன் மேலே செல்லவும் இயலாது கீழே போகவும் இயலாது அக் கிணற்றினுள்ள கொடிகளைப்பற்றித் தொங்கிக்கொண்டிருக்கும்போது அக் கொடிகளை ஒரு எலி கடித்துவிட்டது. அதுபோழ்து மரத்தின்மேலுள்ள ஒரு தேன் கூண்டினின்றும் ஒழுகும் தேன் துளி சில அவன் வாயில் தற்செயலாய் விழ அதைக் கண்டு அவன் பெரிதும் மகிழ்ந்தனன். இவ்வுலகில் பல துன்பங்களுக்கிடையே ஒருவன் பெறும் ஒரு சிறிது இன்பமானது மேலே பாழுங்கிணற்றில் கிடந்த மனிதன் பெற்ற இன்பத்தை ஒக்கும். இதனை,

" ஆனை தூரப்ப அரவுறை ஆழ்குழி
நானவிர் பற்றுபு நாலும் ஒருவன்ஓர்
தேனின் அழிதுளி நக்கும் திறத்தது
மானுடர் இன்பம் மதித்தனை கொள்நீ "

(சூளாமணி - துறவுச் சருக்கம் - 149)

எனக் கவி கூறுதல் காண்க. ஆனால் இத்துணைச் சிறிய இன்பத்தைத் தரும் மானிடப்பிறவி பயன் அற்றதோ எனில், இல்லை. அது பயன் உடையதே. ஏனெனில் நற்குணம், தானம், தவம், பூசனை என இவைகளை மேற்கொண்டு இவ்வுலகில் வாழ்பவர் மறுபிறவியில் கற்பக நிழலுடைய போகபூமியில் சிறந்த இன்பத்தைப் பெறுவர் என்பர் இந் நூலாசிரியர்.

இத்துணைச் சொற்சுவையும், பொருட்சுவையும் செறிந்த இந்நூலின் மூலம்மட்டும் ஏறக்குறைய 50 ஆண்டுகளுக்கு முன்னர் திரு. சி. வை. தாமோதரம்பிள்ளை அவர்களால் பதிப்பிக்கப்பட்டது. இந்நூல் தற்போது கிடைக்கவில்லை. எவரேனும் இந்நூல் முழுமைக்கும் ஒரு உரை கண்டு அதனை வெளிப்படுத்துவரேல் அதுவே நம் தமிழ் அன்னைக்கு ஆற்றும் அரிய பணியாகும். இதற்கு இறைவன் திருவருள் கூட்டுவதாக.

# 7

# இலக்குவன் சீற்றம்

கம்பர் தாம் பாடிய இராமாயணத்துள் பல சிறப்பட்டாரது மனப்பான்மைகளை நாடகவாசிரியர்போல் நன்கு எடுத்துக்காட்டுதலால் கம்பராமாயணத்தினைக் 'கம்ப நாடகம்' எனக் கூறுதலும் உண்டு. இந்நாடகத்துள் கம்பர் இலக்குவனது பண்புகளை எம்முறையில் விளக்கியுள்ளார் என்பதை ஈண்டு ஆராய்வோம். திருமாலின் பாயலான ஆதிசேடனே இலக்குவனாகத் தோன்றினான் என்பது "வளையொடு திகிரியும் வடவை தீதர, விளைதரு கடுவுடை விரிகோள் பாயலும், இளைஞர்களென வடிபரவவேகி" என்ற திருவவதாரப் படலச் செய்யுளான் அறியக்கிடக்கின்றது. இலக்குவன் இராமபிரான்மீது மட்டற்ற அன்புடையவன் ; இராமருக்கு ஓர் இடுக்கண் உற்ற காலத்து அவ்விடுக்கண் தனக்கே உற்றதாகக் கருதும் தன்மையன். கைகேயியின் வரத்தால் இராமர் காட்டிற்குச் செல்லவேண்டும் என்றதைக் கேட்டபோது இலக்குவன் கொண்ட சீற்றத்தினையும் அன்னவன் கூறிய மாற்றத்தினையும் கம்பர் சித்திரித்துக் காட்டுவதைக் காண்போம். அவன் தனது முற்பிறப்பின் இயல்பால் சீற்றங் கொள்ளும் பண்பினன் என்பதனை, "ஆங்காரவார மது கேட்டு அழலுமிழும், பூங்காரரவணையான் பொன்மேனி" என்ற திருமழிசையாழ்வார் அருளிச் செய்த திருவாக்கு வலியுறுத்துகின்றது. சிவபெருமான் போல் சீற்றம் உடையவன் இலக்குவன் என்ற கருத்தில் "முற்றுமதியம் மிலைந்தான் முனிந்தானை யன்னான்" என்றார் கம்பர். (நகர் நீங்கு படலம் - 136) "கூற்றொத் தீயே மாற்றரும் சீற்றம்" (புறம்—56) என்பது ஈண்டு ஒப்பு நோக்கத் தக்கது.

கைகேயியின் சூழ்ச்சியால், காகுத்தன் கானகம் செல்ல வேண்டும் என்பதைக்கேட்ட இலக்குவன் சீற்றங்கொண்டு போர்க்கோலம் பூண்டு "யான் இராமபிரானுக்குக் கொற்ற மௌலியினை இன்றே சூட்டப்போகின்றேன். அதனைத் தடுக்க வருபவரை இப்புவிப்பாரம் கெடக் கொன்று அன்னவர் உடலை அண்டம் முற்றக் குவிப்பேன். என்னைத் தடுக்கும் வன்மையுடையோர் தடுப்பாராக" என வஞ்சினம் கூறுவதனோடு அமையாது, 'விண்ணவர், மண்ணவர், நாகர், மும்மூர்த்திகள் ஆகிய இவர்கள் வந்து எதிர்த்த காலத்தும் கைகேயியின் நோக்கம் நிறைவேறுதற்கு யான் இடங்கொடேன்' என்றான்.

"விண்ணாட்டவர் மண்ணவர் விஞ்சையர் நாகர் மற்று
மெண்ணாட்டவர் யாவரு நிற்கவோர் மூவ ராகி
மண்ணாட்டுநர் காட்டுநர் வீட்டுநர் வந்த போதும்
பெண்ணாட்ட மொட்டே னினிப்பேருல கத்து ளென்னா"
(நகர்நீங்கு படலம் - 122)

இச்செய்யுளில் வந்துள்ள வல்லோசையினைக் காண்க. கம்பர் இடத்திற்கு ஏற்றவண்ணம் சொற்களை அமைத்துப் பாடுதற்கு இக்கவியே சான்றாகும். இலக்குவனது வில்லின் நாண் ஒலியைக் கேட்ட இராமர் அங்குச் சென்று அவன் சீற்றத்தைத் தணிப்பதற்குச் சில அறவுரை கூறுகின்றார். "ஓர் ஆறு நீரில்லாமல் வற்றிப்போவது அவ்வாற்றின் குற்றம் அன்று, மழைபெய்யாத குற்றமேயாகும்; அதுபோல யான் காட்டிற்குச் செல்வது தந்தையின் குற்றம் அன்று. கைகேயியின் குற்றமும் அன்று; பரதன் குற்றமுமன்று. அதற்குக் காரணம் விதியேயாகும். எனவே நீ சீற்றம் கொள்வதில் பயனில்லை" என்றார் இராமர். விதியை மதியால் வெல்லலாம் என்ற கருத்துடன் இலக்குவன் "விதிக்கும் விதியாகும் என் விற்றொழில் காண்டி" என்றான்.

இலக்குவன் சினம் தணியாதது கண்டு இராமர் "துணைத் தம்பியைப் போர் தொலைத்தோ, சான்றோர் புகழும் தவத் தாதையை வாகை கொண்டோ, ஈன்றாளை வென்றோ இனி இக்கதம் தீர்வது?" என்றார். செல்லும் சொல்வல்லானாகிய இராமபிரான் கூறிய மாற்றத்தைக் கேட்ட இளையோன் "கட்டமைந்த வில்லுஞ் சுமக்கப் பிறந்தேன், வெகுண்டென்னை" எனத் தன்னைத்தானே வெறுத்துக்கொண்டான். தன் தம்பியின் சீற்றத்தினை முற்றும் மாற்றும்வண்ணம் இராமபிரான் கூறும் கீழ்க்காணும் செய்யுள் கற்போர் உள்ளத்தைக் கொள்ளை கொள்வதாகும்.

"நன்சொற் கடந்தாண் டெனைநாளும் வளர்த்த தாதை
தன்சொற் கடந்தெற் கரசாள்வது தக்க தன்றால்
என்சொற் கடந்தா லுனக்கியாதுள தீன மென்றான்
தென்சொற் கடந்தான் வடசொற்கலைக் கெல்லை தேர்ந்தான்"
(நகர்நீங்கு படலம் - 140)

'இனிய மொழிகளைக் கூறி என்னைப் போற்றி வளர்த்த தந்தையின் சொல்லை மீறி யான் அரசாட்சி புரிதலை மேற்கொள்வது எனக்குத் தக்கதன்று; ஆனால் என் சொல்லை மீறி நீ நடந்தால் உனக்கு என்ன ஈனம் உள்ளது? எனவே நீ உன் பிரியப்படி செய்' என்றார் இராமர். இச்செய்யுளின் மூன்றாம் வரிக்கு 'என் சொல்லைக் கடந்தால் உனக்கு என்ன நன்மை இருக்கிறது? ஒன்றும் இல்லை. உனக்கு அது இழிவையே தரும்' என வேறுவிதமாகப் பொருள் கூறுவாரும் உளர். எனினும் முன்னர்க் கூறிய பொருளே சிறப்புடைத்து. அதைக்கேட்ட இலக்குவன் ஒருவாறு சீற்றம் துறந்தானெனினும் அன்று முதல் கைகேயியினைத் தனது தாய்மார் மூவருள் ஒருத்தியாகக் கருதவில்லை என்பது பின் வரும் நிகழ்ச்சிகளான் அறியக்கிடக்கின்றது.

இராமபிரான் உதவியால் அரசாட்சியினைப் பெற்ற சுக்கிரீவன் கார்காலம் கழிந்த பின்னர்ப் படைகளுடன் வந்து இராமருக்கு உதவி செய்வதாக வாக்களித்தான். கார் காலம் கழிந்த பின்னரும் அவன் வாராமையால், அவன் நிலையை அறிந்துவர இராமர் இலக்குவனை அனுப்ப, இலக்குவன் மிகுந்த கோபத்தோடும் வேகத்தோடும் கிட்கிந்தைக்குச் சென்றான். அதுபோழ்து சுக்கிரீவன் கள்ளுண்டு களித்து மயங்கிக் கிடக்க, இலக்குவன் சீற்றத்துடன் வருவதைக் கண்ட அனுமன், 'பெண் என்றால் பேயும் இரங்கும்' என்ற கருத்தினைக் கொண்டு, வாலியின் மனைவியாகிய தாரையைச் சுக்கிரீவனின் அரண்மனை வாயிலில் நிற்கும்படி கூறினான். மிக்க சீற்றத்தோடு வரும் இலக்குவன் அரண்மனை வாயிலில், தாரகை நடுவண் தண்மதிபோலத் தன் தோழிகள் புடைசூழ கைம்பெண் கோலத்தோடு நிற்கும் தாரையைக் கண்டான்; அவ்வளவில் அவனது சீற்றம் ஆதவன் முன் தோன்றும் பனி போல் மறைந்தது. மாமியர் குழுவில் வந்து நிற்கும் மருக னைப் போன்று கூச்சமுடன் நின்ற இலக்குவன் அம்மகளிரைக் கண்ணெடுத்துப் பார்க்கவும் அச்சம் கொண்டான். அது போழ்து இசையினும் இனிய சொல்லாளாகிய தாரை "ஐய! நீர் எய்தியது என்னை" என்றாள். தாரையின் கைம்பெண் கோலத்தைக் கண்டவுடன் இலக்குவனது சீற்றம் மாறியது. அவன் தன் தாயரை நினைந்து வருந்துவானாயினன். கம்பர் இதனை விளக்கும் முறையைக் கீழ்க்காணும் செய்யுளிற் காண்க.

"ஆர்கொலோ வுரைசெய் தாரென்று
அருள்வரச் சீற்றம் அலைகாப்
பார்குலா முழுவெண் டிங்கள்
பகல்வந்த படிவம் போலும்

ஏர்குலா முகத்தி னாளை
யிறைமுக மெடுத்து நோக்கித்
தார்குலாம் அலங்கல் மார்பன்
தாயரை நினைந்து நைந்தான் ''

(கிட்கிந்தைப் படலம் - 51)

தாரையின் கைம்பெண் கோலத்தைக் கண்ட வீரன் தனது தாயரும் அத்தகைய ஒளிமழுங்கிய கோலத்துடன் விளங்குவரன்றோ என எண்ணித் தன் தாயரை நினைந்து நைந்தான். தாயர் என்று பொதுப்படக் கம்பர் கூறியதால் இலக்குவன் தனது தாய்மார் மூவரைப் பற்றியும் நினைத்தான் எனக் கூறுதல் கூடாது. ஏனெனில் தன் வரத்தினால் இராமரைக் காட்டுக்கு அனுப்பிய கைகேயியை, இலக்குவன் அந்நாள்முதல் அவள் தன் தாய்மார் மூவருள் ஒருத்தி அல்லள் என்பதைத் தன்னகத்தே கொண்டனன். இக்கருத்தினையே கம்பர் அடுத்த செய்யுளில் வலியுறுத்துகின்றார். தன் தாயரைப்பற்றி நினைந்து வருந்திய இலக்குவன் தன் தாய்மார் மூவரைப்பற்றி நினையாது இருவரைப் பற்றியே நினைந்தான் என்பதை '' இனையராம் என்னை யீன்ற இருவரு மென்ன வந்த, நினைவினான் அயர்ப்புச் சென்ற நெஞ்சினன் நெடிது நின்றான் '' (கிட்கிந்தைப் படலம் - 53) எனக் கவி கூறுவதைக் காண்க.

இலக்குவன் கைகேயியினைத் தன் தாய் அல்லள் என்று விலக்கியதற்கு மற்றுமோர் நிகழ்ச்சியினைக் காண்போம். பதினான்கு ஆண்டுகள் கழித்தபின் இராமர் தம் மனையாளுடனும் தம்பியுடனும் அயோத்திக்குத் திரும்பி வந்தபோது தமது தாய்மாருள் முதலில் கைகேயியினை வணங்கிப் பின்னர் மற்ற இரு தாய்மாரையும் வணங்கினார். இதனை,

" கைகயன் றனயை முந்தக் காலுறப் பணிந்து மற்றை
மொய்குழ லிருவர் தாளு முறைமையின் வணங்குஞ் செங்கண்
ஐயனை யவர்க டாமு மன்புறத் தழுவித் தத்தஞ்
செய்யதா மரைக்க ணீரான் மஞ்சனத் தொழிலுஞ் செய்தார் "
(மீட்சிப் படலம் - 343)

எனக் கம்பர் கூறியுள்ளார். அதன் பின்னர், சீதையும் அம்முறையாகவே முன்னர்க் கைகேயியினையும் பின்னர் மற்ற இருதாய்மார்களையும் வணங்கினாள். ஆனால் இலக்குவன் மட்டும் இம்முறையினைக் கைப்பற்றினான் இல்லை. கைகேயியின் பாதத்தினைத் தனியாக வணங்குதற்கு அவன் உள்ளம் இடம் தரவில்லை. எனவே அவன் மூன்று தாய் மார்க்கும் பொதுவாக வணங்கினான் எனப் பொருள் கருதும் படியுள்ள கீழ்க்காணும் செய்யுள் உள்ளது.

" அன்னமு முன்னர்ச் சொன்ன முறைமையி னடியில் வீழ்ந்தாள்
தன்னிக ரிலாத வென்றித் தம்பியும் தாயர் தங்கள்
பொன்னடித் தலத்தில் வீழந் தாயரும் பொருந்தப் புல்லி
மன்னவற் கிளவ னீயே வாழியென் றுசி சொன்னார் "
(மீட்சிப் படலம் - 344)

எனவே இராமர்மீதுள்ள மட்டற்ற அன்பின் காரணமாக இலக்குவன் கைகேயியினை இறுதி வரையில் தன் தாய்மார் களுள் ஒருத்தியாகக் கருதினானில்லை என்பது மேலே காட் டிய நிகழ்ச்சிகளான் போதரும்.

## 8

# புலமையும் பெண்மையும்—ஆதிமந்தியார்

புலமையும் பெண்மையும் என்ற தொடரில் புலமை என்பது யாது? அது ஆடவர்களுக்குமட்டும் உரியதோ? அல்லது பெண்டிர்க்கும் உரியதோ? அன்றி இருபாலாரும் பெறுதற்குரிய பொருளோ? அதனை எதனால் பெறலாம்? புலமைக்கும் பெண்மைக்கும் உரிய தொடர்பு என்னை? முதலிய இன்னோரன்ன பிறவற்றினை முன்னர் ஆராய்தல் வேண்டும். புலமை என்பது அறிவுடைமையாற் பெறும் பண்பாகும். கல்வி என்பது அறிவுடைமையினைக் கூர்மை செய்யும் கருவியாம். கல்வியும் அறிவுடைமையும் ஆண் பெண் என்ற இருபாலாரும் பெற வேண்டிய பொருள்களாம். அறிவுடையோர் அனைவரும் மக்களாவார். மக்கள் எனப்படுவார் ஐம்பொறி உணர்வேயன்றி மனம் என்பதோர் அறிவுடன் ஆறு அறிவு பெற்றிருப்பதுபற்றி அன்னார் ஐந்து அறிவினையுடைய விலங்கினங்களைப் போன்ற பிற உயிர்களைவிட மேம்பட்டவர் ஆகின்றனர். இதனாலன்றோ ஆசிரியர் தொல்காப்பியனார் "மக்கள் தாமே ஆறறி வுயிரே" (தொல். மரபு - 33) என்றார். அறிவுடைமை யற்றவர் மாக்கள் எனப்படுவர். அவர் விலங்கினங்களுக்கு ஒப்பாவார் என்பது "மாவும் மாக்களும் ஐயறி வினவே" (தொல். மரபு - 32) என்ற நூற்பாவால் விளங்குகின்றது. அறிவுடைமையைப் பெருக்குவது கல்வியே யாகும். ஆகவே கல்வியற்ற மக்கள் விலங்குகளுக்கு ஒப்பாவர் என்பது பெறப்படுகின்றது. இதனை,

"விலங்கொடு மக்க ளனைய ரிலங்குநூல்
கற்றாரோ டேனை யவர்"

என்ற திருக்குறள் வலியுறுத்துதல் காண்க.

இனி மக்கள் என்ற சொல் யாரைக் குறிக்கும் என்பதைக் காண்போம். மக்கள் என்பது அறிவுடைய ஆண் மக்களையும், பெண்மக்களையும் குறிக்கும் ஒரு சொல் என்பது மேலே காட்டிய "மக்கள் தாமே ஆறறி வுயிரே" என்ற நூற்பாவிற்கு உரை கூறப் போந்த பேராசிரியர் "முப்பத்திரண்டு அவயவத்தான் அளவிற்பட்டு அறிவொடு புணர்ந்த ஆடூஉ மகடூஉ மக்களெனப்படும்" என்று கூறுவதினின்று பெறப்படுகின்றது. அறிவுடைமையோடு கூடிய ஆடவரும் பெண்டிரும் மக்களெனக் கூறப்படுவதால் அறிவற்ற ஆடவரும் பெண்டிரும் மாக்கள் எனப்படுவர் என்பது சொல்லாமலே விளங்குகின்றது.

தலைவன் தலைவி ஆகிய இருவரும் "ஒத்த பண்பும், ஒத்த அன்பும், ஒத்த செல்வமும், ஒத்த கல்வியும் உடையராய் இருத்தல் வேண்டும்" என இறையனார் அகப்பொருள் உரையில் நக்கீரனார் கூறியபடி ஆண் பெண் என்ற இருபாலாரும் கல்விகற்றல்வேண்டும் என்பது பெறப்படுகின்றது.பெண்களின் பொது இயல்புகளைக் கூறப்புகுந்த தொல்காப்பியனார் அடக்கம், மறைபுலப்படாமல் நிறுத்தும் உள்ளம், நேர்மை, செய்யத்தகுவன கூறுதல், அறிவுடைமை, உள்ளக் கருத்தறிதலருமை ஆகிய இந்த ஆறு குணங்களும் பெண்களுக்குரிய பொது இயல்புகள் என்பர். இதனை,

"செறிவும் நிறைவும் செம்மையும் செப்பும்
அறிவும் அருமையும் பெண்பா லான."

(தொல். பொருளியல் - 15)

என்ற நூற்பாவால் அறியலாகும். ஈண்டுக் கூறப்பட்டுள்ள பெண்பாலரின் இயல்புகளில் அறிவுடைமையும் ஒன்று என்பது நோக்கத்தக்கது.

நந்தம் நாட்டில் ஆண்களைப் போலப் பெண்களும் கல்வி கற்றுப் புலமையுடன் விளங்கினர் என்பது அன்னார் பாடி

யுள்ள பாக்களால் அறியக்கிடக்கின்றது. வேதங்களுள் பழமையான இருக்கு வேதத்தில் விசுவாவரை, உலோபா முத்திரை, வாக்தேவியார் முதலிய பெண்பாற் புலவர் பாடிய பாக்கள் உள்ளன. இதிகாச காலத்தும் பெண்கள் புலமை யுடன் விளங்கினர் என்பது இராமாயணம், பாரதம் முதலிய இதிகாசங்களால் அறியலாகும். கடைச்சங்க காலத்தில் ஔவையார், வெள்ளிவீதியார், காக்கை பாடினியார் நச்செள்ளையார் முதலிய பெண்பாற் புலவர் பாடிய பாக்கள், அக்காலத்தில் விளங்கிய பெண்பாற் புலவர்களின் புலமை நலத்தினை எடுத்துக் காட்டும் சான்றுகளாக விளங்குகின்றன. இனிக் கம்பர் காலத்தும் பெண்கல்வி விளங்கிற்று என்பதனை அவர் பாடியுள்ள இராமாயணத்துள் நாட்டுப் படலத்துள் வந்துள்ள அடியிற்காணும் பாட்டினால் அறியலாகும்.

" பெருந்த டங்கட் பிறைநுத லார்க்கெலாம்
பொருந்து செல்வமுங் கல்வியும் பூத்தலால்
வருந்தி வந்தவர்க் கீதலும் வைகலும்
விருந்து மன்றி விளைவன யாவையே "

(நாட்டுப் படலம் - 36)

சைவ வைணவப் பெரியார்களின் பாக்களை நோக்குவோம். அவர்களுள்ளும் புலமை மிக்க பெண்பாற் புலவர் விளங்கினர். அறுபத்துமூன்று நாயன்மார்களுள் ஒருவரான காரைக்காலம்மையார் பாடியருளிய திருவாலங்காட்டு மூத்த திருப்பதிகம், திருவிரட்டை மணிமாலை, அற்புதத் திருவந்தாதி ஆகிய இம் மூன்றும் பதினோராந் திருமுறையிற் காணலாம். வைணவ சமயத்தைச் சார்ந்த பன்னிரு ஆழ்வார்களுள் ஆண்டாள் அம்மையார் பாடியருளிய நாச்சியார் திருமொழியும், திருப்பாவையும் நாலாயிரப் பிரபந்தத்தில் இடம் பெற்றுள்ளன. வேத காலத்திலும், சங்க காலத்திலும், அதற்குப்

பிற்காலத்திலும் பெண்கள் புலமையுடன் விளங்க, இடைக் காலத்தே (ஸ்மிருதி காலத்தில்) விளங்கிய சிலர் பெண்களுக் குக் கல்வி கூடாது என எழுதிவிட்டுச் சென்றனர். நம் நாட்டுப் புலவர் பாரதியார் பெண்கல்வி கூடாது எனக் கூறு றவரை வெறுத்துக் கூறுகின்றார் என்பதை அவரது பாக் களில் பரக்கக் காணலாம்.

“ பெண்ணுக்கு ஞானத்தை வைத்தான்—புவி
பேணி வளர்த்திடும் ஈசன்
மண்ணுக்குள் ளேசில மூடர்—நல்ல
மாதர் அறிவைக் கெடுத்தார்.

கண்கள் இரண்டினில் ஒன்றைக்—குத்திக்
காட்சி கெடுத்திட லாமோ ?
பெண்கள் அறிவை வளர்த்தால்—வையம்
பேதமை அற்றிடும் காணீர் ” (முரசு. 9. 10)

எனவே கண்கள் இரண்டும் ஒரு பொருளினையே காண்பது போல் காதன் மனையாளும் காதலனும் தம்முள் மாறுபாடு இன்றி இல்லறத்தை நல்லறமாக நடத்த வேண்டுமாகில் இரு வருக்கும் கல்வியோடு கூடிய அறிவுடைமை இன்றியமையா தது என்பது பெறப்படுகின்றது. இதுகாறும் பெண்மையும் புலமையும் என்பதுபற்றிக் கூறினேன். இனிச் சங்க காலத்தே விளங்கிய நல்லிசைப் புலமை மெல்லியலாரான ஆதிமந்தியாரைப்பற்றி ஆராய்வோம்.

கடைச் சங்க நூலாகிய எட்டுத்தொகையுள் நற்றிணை, குறுந்தொகை, பதிற்றுப்பத்து, அகநானூறு, புறநானூறு ஆகிய இந்நூல்களில் ஏறக்குறைய 35 பெண்பாற் புலவர்கள் பாடிய 160 பாக்கள் கிடைத்துள்ளன.

*[இவற்றுள் ஒளவையார் பாடியனவாக 59 பாக்களும், வெள்ளிவீதியார் பாடியனவாக 13-ம், காக்கை பாடினியார்

*போதிய காலம் இன்மையால் இவ்வரிகள் வானொலிப் பேச் சில் படிக்கப்படவில்லை.

நச்செள்ளையார் பாடியனவாக 12-ம், ஒக்கூர் மாசாத்தியார் பாடியனவாக 8-ம், கழார்க்கீர னெயிற்றியார் பாடியனவாக 8-ம், மாறோக்கத்து நப்பசலையார் பாடியனவாக 8-ம், கச்சுப் பேட்டு நன்னாகையார் பாடியனவாக 6-ம், நக்கண்ணையார் பாடியனவாக 6 பாக்களும் கிடைத்துள்ளன. இவர்களைத் தவிர்த்து மற்றப் பெண்பாற் புலவர் அனைவரும் ஆறுக்குக் குறைந்த பாக்களையே பாடியுள்ளனர். ஏறக்குறைய 18 பெண்பாற் புலவர் ஒவ்வொருவரும் ஒரே ஒரு பாட்டினைப் பாடியுள்ளனர். எனவே இத்தகையாரது வரலாற்றினைப் பற்றி அறிதற்குக் குறிப்புக்கள் பல இல்லை. இவ்வாறு ஒரே பாட்டுப் பாடிய பெண்பாற் புலவருள் ஆதிமந்தியாரும் ஒருவ ராவர். மேலே காட்டிய எட்டுத்தொகை நூல்களே யன்றித் திருவள்ளுவமாலையிலும் சில பெண்பாற் புலவரின் பாடல் களைக் காணலாம்.]

ஆதிமந்தியார் பாடியதாகக் குறுந்தொகையுள் "மள்ளர் குழீஇய" எனத் தொடங்கும் ஒரே பாடல் கிடைத்துள் ளது. ஆனால் ஆதிமந்தியாரைப் பற்றிய சில குறிப்புக்கள் அகநானூறு, சிலப்பதிகாரம், பட்டினத்துப் பிள்ளையார் புராணம் ஆகிய இந்நூல்களுள் காணலாகும். வரலாற்றுக் குறிப்பினை எடுத்துக் கூறுவதில் வல்லரான பரணர் அகநானூற்றில் தாம் பாடிய பாக்களுள் ஆறு பாக்களில் ஆதிமந்தியாரைப் பற்றிய குறிப்புக்களைக் கூறியுள்ளார். இது காறும் கூறிய நூல்களிலுள்ள பாக்களின் துணைகொண்டு ஆதிமந்தியாரின் வரலாற்றினை ஆராய்வோம்.

சோழன் கரிகாலன் என்பான் சோழ நாட்டை ஆண்ட முடியுடை மன்னருள் முதன்மை பெறுதற்குரிய பெருமை வாய்ந்தவன். இவன் உருவப்பஃறேரிளஞ்சேட் சென்னியின் புதல்வன் என்பது பொருநராற்றுப்படையால் போதரும்.

உழுவித்து உண்ணும் வேளாளனும், மன்னர்க்குப் பெண் கொடுக்கும் உரிமை யுடையோனுமாகிய நாங்கூர் வேளிடை (cf. தொல். அகத்திணை சூ. 30. உரை) இவன் பெண்கொண்டு இல்வாழ்க்கையினை நடத்தி வந்தான். இக் கரிகாலனது மகள் ஆதிமந்தியார். இளமை முதல் புலமை நலம் மிகுந்த அழகு மிக்க ஆதிமந்தி உரிய பருவத்தில் ஆட்டனத்தி என்ற சேர அரசனை மணந்தாள். இவனது பெயர் சங்கநூலில் அத்தி எனவும் ஆட்டனத்தி எனவும் குறிக்கப்பட்டுள்ளது. அத்தி நடனக் கலையில் வல்லவனாதலின் கூத்தன் என்று பொருள்படும் ஆட்டன் என்ற அடைமொழியினைப் பெற்று ஆட்டனத்தி எனவும் பொருநன் எனவும் அழைக்கப்பட்டான். சேரர்க்குக் கூத்தாடுதல் வழக்கம் என்பது ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் துணங்கைக் கூத்து ஆடினன் என்று பதிற்றுப்பத்தில் வருதல் காண்க. ஆட்டனத்தி அழகாற் பொலிவு பெற்ற நிமிர்ந்த திரண்ட தோளினை உடையவன் என்பது,

> " ஈட்டெழிற் பொலிந்த ஏந்துகுவவு மொய்ம்பின்
> ஆட்ட னத்தி " (அகம் - 222)

என்ற அகநானூற்றுப் பாடலால் விளங்குகின்றது. சோழ நாட்டில் ஆண்டு தோறும் காவிரிப் புதுப்புனல் விழா நடைபெறுவதுண்டு. சோழன் கரிகாலன் தனது அமைச்சர்களுடனும், சுற்றத்தாருடனும் கழார் என்னும் ஊரிலுள்ள காவிரித் துறையில் நடைபெறும் காவிரிப் புதுப்புனல் விழாவினைக் காணுதற்குச் சென்றான். கரிகாலன் புதுப்புனல் விழாக் கொண்டாடும் இச் செய்தியினை இளங்கோவடிகள் சிலப்பதிகாரத்துள் கடலாடு காதையுள் குறிப்பிடுதல் காண்க. காவிரிப்பூம்பட்டினத்தில் நடந்த இந்திரவிழாவிற்குப்பின் மக்கள் கடலில் நீராடச் சென்றனர். அப்போது கடற் கரையிலுள்ள ஆரவாரம் கரிகால்வளவன் காவிரியின்

புதுப்புனல் விழாக் கொண்டாடும் சிறந்த நாளினைப் போன்றது எனக் கூறும் அடியிற் காணும் வரிகளை நோக்குக.

> " விண்பொரு பெரும்புகழ்க் கரிகால் வளவன்
> தண்பதம் கொள்ளும் தலைநாட் போல
> வேறுவேறு கோலத்து வேறுவேறு கம்பலை
> சாறுஅயர் களத்து வீறுபெறத் தோன்றி "
>
> (கடலாடுகாதை 159 - 162)

ஆதிமந்தியும் அவளது கணவன் ஆட்டனத்தியும் புதுப்புனல் விழாவிற்குச் சென்றனர். அவ்விழாவிற்குச் சென்ற ஆட்டனத்தியின் தோற்றத்தினைக் கூறப்போந்த பரணர்,

> " கச்சினன் கழலினன் தேந்தார் மார்பினன்
> வகையமைப் பொலிந்த வனப்பமை தெரியல்
> சுரியலம் பொருநனை " (அகம் - 76)

எனக் கூறுவதினின்று ஆட்டனத்தி கச்சினையும், கழலினையும், தேன் ஒழுகும் தாரினையுடைய மார்பினையும், சுருண்ட குழலினையும் உடையவனாய் விளங்கினான் என்பது பெறப்படுகின்றது. புனல் விழாவில் கலந்துகொள்ளக் கருதிய ஆட்டனத்தி இன்னிசை இயம்ப, தன் அழகிய வீரக்கழல் காலில் புரள, கரிய கச்சிற் கோத்துக் கட்டிய அழகிய பொன்னாலாகிய பாண்டில் மணிகள் ஒலிக்க, காவிரியாற்றில் இறங்கி, பலவகையான நடனங்கள் ஆடி அந்நீரில் நீந்துவானாயினன். ஆட்டனத்தியின் நடனங்களைக் கண்ட கரிகாலன் முதலியோர் கழிபேர் உவகை கொண்டனர். அதுபோழ்து ஆட்டனத்தியின் அழகைக் கண்டு விரும்பிக் காவிரி அவனை அழைத்துக் கொண்டு போய்க் கடலுள் மறைத்துவிட்டது. இச் செய்தியினைப் பரணர் பாடியுள்ள அடியிற்காணும் பாட்டினால் அறிக.

" ஒலிகதிர்க் கழனிக் கழாஅர் முன்றுறைக்
கலிகொள் சுற்றமொடு கரிகால் காணத்
தண்பதங் கொண்டு தவிர்ந்த இன்னிசை
ஒண்பொறிப் புனைகழல் சேவடிப் புரளக்
கருங்கச்சு யாத்த காண்பின் அவ்வயிற்று
இரும்பொலம் பாண்டில் மணியொடு தெளிர்ப்பப்
புனல்நயந் தாடும் அத்தி அணிநயந்து
காவிரி கொண்டொளித் தாங்கு " (அகம் - 376)

தன் கணவனைக் காணப்பெறாத ஆதிமந்தி கழி பெருந் துன்பம் கொண்டாள். அவள் தன் எதிரே வருபவர்களை யெல்லாம் நோக்கித் தனது கணவனின் தோற்றம் உடை முதலியனவற்றை எடுத்துக் கூறி " எனது கணவனைக் கடல் கொண்டு ஒளித்ததோ? புனல் கொண்டு ஒளித்ததோ? அன்றி அவன் எங்கேனும் நடனம் செய்யப் போயிருக் கின்றானோ? எனப் பலவாறு புலம்பி அவனைக் கண்டு பிடிக்கும் பொருட்டுப் பல ஊர்கள் தோறும் திரியலுற்றாள். இதனை,

" ஏற்றியல் எழில்நடைப் பொலிந்த மொய்ம்பின்
தோட்டிருஞ் சுரியல் மணந்த பித்தை
ஆட்ட னத்தியைக் காணீ ரோவென
நாட்டின் நாட்டின் ஊரின் ஊரிற்
கடல்கொண் டன்றெனப் புனலொளித் தன்றெனக்
கலுழ்ந்த கண்ணள் காதலற் கெடுத்த
ஆதி மந்தி போல " (அகம் - 236)

என்ற பரணர் வாக்கால் உணரலாம். தனது கணவனைத் தேடுதற்குச் சென்ற ஆதிமந்தி வீரர் குழுமியுள்ள விழா நிகழும் இடங்களிலும், மகளிர் துணங்கைக் கூத்தாடும் இடங்களிலும் சென்று " எனது காதலனைக் கண்டீரோ "

எனக் கேட்டுக் கொண்டே காவிரியின் கரையோரமாய்ச் சென்று கடற்கரை அடைந்து அங்கும் நின்று புலம்புவா ளாயினள். இச் செய்தியினை ஆதிமந்தியார் பாடிய குறுந் தொகைச் செய்யுளால் அறியலாகும். "மாட்சிமை மிக்க எனது காதலனை யான் வீரர் கூடியுள்ள சேரி விழாவின் கண்ணும், மகளிர் தம்முள் தழுவி ஆடுகின்ற துணங்கைக் கூத்தின்கண்ணும் ஆகிய எவ்விடத்தும் தேடியும் கண் டேனில்லை. யானும் ஆடுகின்ற களத்திற்குரிய ஒருமகளே, எனது கையிலுள்ள சங்கு வளையல்கள் நெகிழும்படி எனக் குப் பிரிவுத்துன்பத்தைத் தந்த பெருமைமிக்க தலைவனும் ஆடுகின்ற களத்திலுள்ள ஒருவனே" எனப் பொருள்படும் கீழ்க்காணும் குறுந்தொகைச் செய்யுளை நோக்குக.

"மள்ளர் குழீஇய விழவி னானும்
மகளிர் தழீஇய துணங்கை யானும்
யாண்டுங் காணேன் மாண்டக் கோனை
யானுமோர் ஆடுகள மகளே என்கைக்
கோடீர் இலங்குவளை நெகிழ்த்த
பீடுகெழு குரிசிலுமோர் ஆடுகள மகனே"

(குறுந்தொகை - 31)

இப்பாட்டில் ஆதிமந்தி தனது பெயரினையும், தனது தலைவன் பெயரினையும் குறிப்பிடவில்லையாதலின், தன் வரலாற்றினை இதன் மூலம் கூறுகின்றாள் என்பது எவ்வாறு பொருந்தும்? எனச் சிலர் ஐயுறலாகும். இந்த ஐயம் கீழ்க்காணும் தொல்காப்பிய நூற்பாவால் விளக்கப்பெறும்.

"மக்கள் நுதலிய அகனைந் திணையும்
சுட்டி ஒருவர் பெயர்கொளப் பெறாஅர்"

(தொல். அகத்திணை - 54)

இந்நூற்பாவின்படி குறிஞ்சி முதலிய ஐந்திணை பற்றிப்பாடும் பாக்களில் மக்கள் பெயரைக் கூறும்போது, பொருப்பன், மகிழ்நன் முதலிய பொதுப் பெயரால் கூறுதல் வேண்டுமென்பதும், தலைமக்களுடைய இயற்பெயரைச் சுட்டிக் கூறல் கூடாது என்பதும், அவ்வாறு இயற்பெயரைச் சுட்டிக் கூறின் அப்பாட்டு அகத்திணையின்பாற்படாது புறத் திணையின்கட்படும் என்பதும் பெறப்படுகின்றன.

கடற்கரையின் அருகேவந்து தம் காதலனின் பிரிவு குறித்துக் கலங்கும் ஆதிமந்தியாரின் அவலத்தினையும், கற்பின் திண்மையினையும் கண்ட கடல், ஆதிமந்தியார்பால் இரக்கம் கொண்டு ஆட்டனத்தியைக் கரையிற் கொணர்ந்து காட்ட, துன்பத்தில் ஆழ்ந்திருந்த ஆதிமந்தியார் அதனைக் காணாது வருந்துவாராயினர். இதனைக்கண்ட மருதி என்ற ஒருமாது ஆதிமந்தியாரிடத்தே இரக்கம் கொண்டு தன் உயிர்க்கு அஞ்சாது கடலில் சென்று தேடி ஆதிமந்தியாருக்கு அவரது கணவனைக் கொணர்ந்து காட்டித் தான் உயிர்விட்டுப் பொன்றாப் புகழ் எய்தினாள் என்னும் செய்தி,

> “ மாதிரந் துழைஇ மதிமருண் டலந்த
> ஆதி மந்தி காதலற் காட்டிப்
> படுகடல் புக்க பாடல்சால் சிறப்பின்
> மருதி யன்ன மாண்புகழ் பெறீஇயர் ” (அகம் - 222)

என்ற அகநானூற்றுப் பாடலால் அறியக்கிடக்கின்றது. தம் கற்பின் திண்மையால் கணவனைப் பெற்ற ஆதிமந்தியார் மகிழ்ச்சி கூர்ந்து மருதியினை மனமார வாழ்த்தித் தம் கண் மணியனைய காதலனுடன் இன்புற வாழ்ந்து வருவாராயினர். இதுவே ஆதிமந்தியாரின் வரலாற்றின் சுருக்கமாகும்.

தலைவனைப் பிரிந்த தலைவிகொண்ட துன்பத்திற்கும், கற்பின் திண்மைக்கும் ஆதிமந்தியாரை உவமையாகக்

கூறுதலைத் தமிழ் இலக்கியத்துள் பல இடங்களிற் காண லாகும். எடுத்துக்காட்டாக, தலைவனைப் பிரிந்து வருந்தும் வெள்ளிவீதியார் என்ற பெண்பாற் புலவர்,

"...........யானே
காதலற் கெடுத்த சிறுமையொடு நோய்கூர்ந்(து)
ஆதி மந்தி போலப் பேதுற்(று)
அலந்தனென் உழல்வென் கொல்லோ" (அகம் - 45)

எனத் தமது துன்பத்தினை ஆதிமந்தியார் கொண்ட துன்பத்தோடு ஒப்பிட்டுக் கூறியதனைக் காண்க. பாண்டியன் மயங்கிவிழ, கண்ணகி நடுங்கி வீழ்ந்த பாண்டிமாதேவியை விளித்து, "கற்புடை மகளிர் பிறந்த புகார் நகரத்தில் யான் பிறந்தேன். யான் கற்புடை மகள் என்பது உண்மையாயின் இம்மதுரைமாநகரை அழிப்பேன்" என வஞ்சினம் கூறுங் கால் புகாரிலுள்ள ஏழு கற்புடைப் பெண்டிரைக் குறிப்பிடும் போது, அவருள் ஆதிமந்தியாரை ஒருவராக வைத்துக் கூறுதல் ஈண்டு நோக்கத்தக்கது.

"மன்னன் கரிகால் வளவன்மகள் வஞ்சிக்கோன்
தன்னைப் புனல்கொள்ளத் தான்புனலின் பின்சென்று
கல்நவில் தோளாயோ வென்னக் கடல்வந்து
முன்னிறுத்திக் காட்ட அவனைத் தழீஇக்கொண்டு
பொன்னங் கொடிபோலப் போதந்தாள்"

(சிலப்பதிகாரம்—வஞ்சினமாலை - 11-15)

எனக் கண்ணகி வாயிலாக இளங்கோவடிகள் ஆதிமந்தியாரின் கற்பின் மாண்பினைப் பாராட்டுகின்றார். சிலப்பதிகாரத்துள் கூறப்பட்டுள்ள கற்புடை மகளிர் எழுவர் வரலாறும் பட்டினத்துப் பிள்ளையார் புராணத்தில் பூம்புகார்ச் சருக்கத்தி லும் கூறப்பட்டுள்ளது.

" கரிகாலன் பெருவளவன் மகள்கேள்வன் கடல்புக்கான்
திருவேயோ எனவழைத்துத் திரைக்கரத்தால் தரக்கொண்டாள்"
(பட்டினத்துப்பிள்ளையார் புராணம்)

என அப்புராணத்துள் ஆதிமந்தியாரின் கற்பின் வன்மை பாராட்டப் பட்டுள்ளது. இதுகாறும் கூறியவற்றால் ஆதி மந்தியார் என்பார் புலமையுடனும் கற்பின் திண்மையுடனும் விளங்கிய காரிகையார் என்பது விளங்குகின்றது. இவ்வம்மை யாரைப்போன்ற பல கற்பரசிகளின் வரலாறு தமிழ் இலக் கியத்துள் காணப்படுதலால் அவ்வரலாறுகளைப் பொதுவாக ஆடவரும் சிறப்பாகப் பெண்மக்களும் படித்துப் பயன் பெறு வார்களாக.

# 9

## கவியுள்ளமும் கலைஞானமும்

நம் நாட்டுக் கவிஞர் எழுதிப்போந்த நூல்களுக்குப் பல அரிய ஆராய்ச்சிக் கட்டுரைகளும் நூல்களும் வெளிவருதல் வேண்டும். தற்போது சங்க இலக்கியத்தைப் பற்றியும், பிற சாத்திரத் தோத்திர நூல்களைப் பற்றியும் சில ஆராய்ச்சி நூல்களே வெளிவந்துள்ளன. ஆனால் மேனாட்டுக் கவிஞர் இயற்றிய நூல்களுக்குப் பல அரிய ஆராய்ச்சி நூல்கள் உள்ளன. உதாரணமாக ஆசிரியர் ஷேக்ஸ்பியர் (Shakespeare) நாடகங்களை நோக்குவோம். ஹாஸிலெட் (Hazlitt) என்பவர் 'ஷேக்ஸ்பியர் நாடகத்திலுள்ள பாத்திரங்கள்' (Characters of Shakespeare's Plays) என்ற நூலினையும், ஜேமிஸன் (Jameson) என்ற அம்மையார் 'ஷேக்ஸ்பியர் நாடகத்திலுள்ள தலைவியர்' (Heroines in Shakespeare) என்ற நூலினையும், ஆசிரியர் டௌடன் (Dowdon) என்பவர் ஷேக்ஸ்பியரின் 'கவியுள்ளமும் கலைஞானமும்' (Shakespeare's Mind and Art) என்ற அரிய ஆராய்ச்சி நூலினையும் இயற்றியுள்ளனர். ஷேக்ஸ்பியர் நாடகத்திற்கு இதுபோன்ற ஆராய்ச்சி நூல்கள் பலவுள. மேலே குறிப்பிட்ட டௌடன் எழுதிய நூலினைக்கண்ட பின்னர், நம் நாட்டுக் கவிகளின் கவியுள்ளத்தையும் கலைஞானத்தையும் ஆராய்தல் வேண்டும் என்ற பேரவாவானது என்னைப் பலகாலும் பிடர் பிடித்துந்தியது. எனவே இராமலிங்க அடிகளின் கவியுள்ளத்தினையும் கலைஞானத்தினையும் ஈண்டு எழுதத் துணிந்தேன்.

இராமலிங்கரின் கவியுள்ளத்தினை முதற்கண் கூறுவாம். அடிகள் இனிய, எளிய பயின்ற நடையில் கவிபாடும் பண்பு வாய்ந்தவர். எனவே அவர்களது திருப்பாடல்களைக் கற்றோ

ரன்றி மற்றோரும் பாவலரன்றிப் பாமரரும் கற்று இன்புற்று வருகின்றனர். 'பணியுமாம் என்றும் பெருமை' என்பதற்கு அடிகளே இலக்காவர். அவர் மாணவர் ஒருவர், ஒருமுறை, 'திருவருட்பிரகாச வள்ளலார் என்னும் இராமலிங்க சுவாமிகள்' என்று எழுதி அடிகளுக்குக் காட்ட, அதைக்கண்டு அடிகள் நகைத்து, 'ஆம் நீ சொல்வது உண்மையே; திருவருட் பிரகாச வள்ளல் யார் ? (யாவர்) என்னும் (என்று ஆராயும்) இராமலிங்கன்' என்று கூறியதாக ஒரு வரலாறு வழங்கப் படுகிறது. இதனால் அடிகள் அடக்கமுடைமை என்ற குணத் திற்கு எடுத்துக்காட்டாக விளங்கியவர் என்பது போதரும். அவர் சிவபெருமான், உமாதேவியார், முருகர், விநாயகர் முதலிய கடவுளரைப் பாடியதனோடமையாது அனுக்காணத் தம்மை பஞ்சரத்தினம், ஸ்ரீ இராமநாமத் திருப்பதிகம், திரு வெவ்வுளூர் ஸ்ரீ வீரராகவப் பெருமாள் போற்றித் திருப் பஞ்சகம், திருக்கண்ணமங்கை இலக்குமி தோத்திரம் முதலி யன பாடியிருத்தலால் சமயக் கோட்பாட்டில் சமரச நிலை யுடையவராகவே விளங்கினார் என்று தெரிகின்றது. அடிகள் உள்ளத்தில் சீவகாருணியமே தலையாய அறமாக விளங்கியது.

'சீவகாருணிய ஒழுக்கம்' என்ற ஒரு சிறந்த கட்டுரை அவர் நமக்கு வழங்கியுள்ளனர். அதில் அவர்கள் கூறிய சில கருத்துக்களை ஈண்டுத்தருவாம். 'சீவகாருணியம் இல்லை யாகில், இகலோக ஒழுக்கம் எவ்வளவும் வழங்கமாட்டாது என்று அறியவேண்டும். எப்படியென்னில், சீவகாருணியம் இல்லாதபோது அறிவும் அன்புந் தோன்றா. அவை தோன்றாத போது கண்ணோட்டமும் ஒருமையும் உபகாரமும் விளங்கா. அவை விளங்காதபோது வலிய சீவர்களால் எளிய சீவர்கள் ஒழுக்கம் பொறுமை முதலானவை தடைபட்டழிந்து போம். ........' '........பரலோக ஒழுக்கமும் சீவகாருணியத்தால் வழங்குகின்றது. அது இல்லையாயின் பரலோக ஒழுக்கமும்

வழங்கமாட்டாது. எப்படியென்னில் :—சீவகாருணியம் இல்லாதபோது அருள்விளக்கம் தோன்றாது. அது தோன்றாதபோது கடவுள்நிலை கைகூடாது. அது கூடாதபோது முத்தியின்பம் ஒருவரும் அடையமாட்டார்கள்.' "......சீவகாருணியம் என்கின்ற திறவுகோலைக் கொண்டுதான் மோட்சமாகிய மேல்வீட்டுக் கதவைத் திறந்துகொண்டு உள்ளே புகுந்து எக்காலத்தும் அழியாத இன்பத்தை அனுபவித்து வாழ வேண்டும்."

இவ்விருபதாம் நூற்றாண்டிலும்கூட மக்கள் சில குருட்டுப் பழக்கங்களைக் கையாண்டு வருகின்றனர். அநேகர் ஆடு கோழி முதலியவைகளைச் சிறு தேவதைகட்குப் பலியிடுகின்றனர். 'உங்கள் மக்களும் நீங்களும் நோய்பட, எங்கள் மக்களும் யாங்களும் என்செய்தோம்' என்று அவைகள் அரற்றும் அழுகுரலினை அன்னார் செவிமடுக்கின்றார்கள் இல்லை. அடிகளும் சிறு தேவதைகட்கு மக்கள் பலியிடுவதைக் கண்டு தாம் நடுங்கியதாகவும், பிறவுயிர் பதைத்த காலத்துத் தம்மனம் பதைத்ததாகவும், வலைஞர் வலையுடனும் தூண்டிலுடனும் சென்றகாலத்துத் தாம் அவைகளைக் கண்டபோது தம் உள்ளம் நடுங்கியதாகவும் பிள்ளைப்பெருவிண்ணப்பம் என்ற தலைப்பில் குறிப்பிட்டிருக்கின்றார்கள்.

" நலிதரு சிறிய தெய்வமென்று ஐயோ
நாட்டிலே பலபெயர் நாட்டிப்
பலிதர ஆடு பன்றிகுக் குடங்கள்
பலிக்கடா முதலிய வுயிரைப்
பொலிவுறக் கொண்டே போகவுங் கண்டே
புந்திநொந் துளநடுக் குற்றேன்
கலியுறு சிறிய தெய்வவெங் கோயில்
கண்டகா லத்திலும் பயந்தேன் "

(பிள்ளைப்பெரு விண்ணப்பம் - 59)

" துண்ணெனக் கொடியோர் பிறவுயிர் கொல்லத்
தொடங்கிய போதெலாம் பயந்தேன்
கண்ணினால் ஐயோ பிறவுயிர் பதைக்கக்
கண்டகா லத்திலும் பதைத்தேன்
மண்ணினில் வலையும் தூண்டிலுங் கண்ணி
வகைகளும் கண்டபோ தெல்லாம்
எண்ணியென் னுள்ள நடுங்கிய நடுக்கம்
எந்தைநின் திருவுள மறியும் "

(பிள்ளைப்பெரு விண்ணப்பம் - 60)

அடிகள் தாம் பாடிய பாக்களுள் பலவிடங்களுள் கொல்லாமை என்ற அறமே சிறந்த அறம் என்று வற்புறுத்தி யிருக்கின்றார்கள் ; ஒருவன் ஆணைப் பெண்ணுக்கும் திறமை யினையும், இறந்தவர்களை எழுப்புகின்ற சக்தியினையும் பெற் றிருந்தாலும் அன்னவன் புலாலுண்பானாகில் அவனை ஞானியெனக் கூறுதலாகாது என்று அறநிலை விளக்கம் என்ற தலைப்பில் கூறிப் போந்தார்.

" மருவாணைப் பெண்ணாக்கி யொருகணத்திற்
கண்விழித்து வயங்கு மப்பெண்
உருவாணை யுருவாக்கி யிறந்தவரை
யெழுப்புகின்ற வுறுவ னேனும்
கருவாணை யுறவிரங்கா துயிருடம்பைக்
கடிந்துண்ணுங் கருத்த னேலெங்
குருவாணை எமதுசிவக் கொழுந்தாணை
ஞானியெனக் கூறொ ணாதே "

(திருஅருட்பா : அறநிலை விளக்கம்)

மேலே காட்டிய செய்யுளில் ' எம் குருவாணை எமது சிவக்கொழுந்தாணை ' என்று கூறியதின் நயம் குறிப்பிடத் தக்கதாகும். உலகில் மக்கள் தமக்கு உயிரனைய பொருளின் மேல் ஆணையிடுவர். எனவே சிலர் தம் குழந்தைகள் மீதும் தாம் வழிபடும் கடவுளர்மீதும் ஆணையிடுவது மரபாகும். எடுத்துக்காட்டாக, கைகேயி தசரதனிடம் வரம் பெறுவதற்

காகப் பிணக்குற்றபோது அவளது வஞ்ச மனத்தை ஓராத மன்னன் 'உள்ளம் உவந்துள செய்வனென்றும் லோபேன், வள்ளல் இராமன் உன்மைந்தனுணை' என்றான். (கைகேயி சூழ்வினைப்படலம்-7). ஈண்டு மன்னவன் வள்ளல் இராமன் உன் மைந்தன் ஆணை, யென்று கூறியது குறிப்பிடத் தக்க தாகும். திருஞானசம்பந்தர், தாம் மதுரைக்குப் போக இருப்பதைத் திருநாவுக்கரசரிடம் கூறினார். அதைக் கேட்ட திருநாவுக்கரசர், "அங்குச் சென்றால் சமணர் கடுவினை செய்வர். தாங்கள் செல்வதற்குக் கோள்களும் சரியாக இல்லை; எனவே யான் தாங்கள் செல்ல இசையேன்" என்றார். அதைக் கேட்ட ஆளுடைய பிள்ளையார், "என்று கூற வெல்லையிலா நீறு போற்றுமிருவரையுஞ், சென்று காணுங் கருத்துடையேன்......சைவ நெறியா ரித்தன்றி, யொன்றுஞ் செய்யேன் ஆணையுமது என்றார்" (திருநாவுக்கரசர் புராணம்—288), இவ்விடத்து ஆளுடையபிள்ளையார் நாவுக்கரசர்மீது ஆணை யென்று சொல்வதினின்று பிள்ளையார் நாவுக்கரசர் தமக்கு உயிரனையார் எனக் கருதி யிருந்தனர் என்பது புலனாகும். முன் காட்டிய செய்யுளில் இராமலிங்க சுவாமிகள் தம் குருவாணை,சிவக்கொழுந்தாணை ஞானியெனக் கூறினுதே யென்பது, கொலை செய்வோரிடத்து அன்ன வர்க்கிருந்த வெறுப்பினைக் காட்டுகின்றது. கொல்லாமை யினைப்பற்றி வற்புறுத்திக் கூறிய புலவர் பலராவர். தாயுமான தயாபரரும்,

"கொல்லா விரதம் குவலயமெல் லாமோங்க
எல்லார்க்கும் சொல்லுவதென் னிச்சை பராபரமே"

என்று கூறிப் போந்தார். சீவகசிந்தாமணியின் ஆசிரியராகிய திருத்தக்கதேவர் முத்தியிலம்பகத்தில் கொலை செய்வோர் நரகத் துன்பத்தின்பாற்படுவர் என்ற கருத்துத் தோன்ற,

" சிலையினன் மாக்கள் கொன்று செழுங்கடல் வேட்ட மாடி
வலையினன் மீன்கள் வாரி வாழுயிர்க் கூற்ற மான
கொலைநரைக் கும்பி தன்னுட் கொந்தழ லழுத்தி யிட்டு
நலிகுவர் நாளு நாளு நரகரை நாம வேலோய் "

(சிந்தாமணி - 2770)

என்று கூறியுள்ளனர்.

அடிகளின் கவியுள்ளமானது வாய்மையினை மக்களுக்கு வற்புறுத்தவேண்டுமென்பதிலும் சென்றிருந்தது என்பதற்கு அவர் பாக்களில் பல சான்றுகள் உள. அடிகள் தம்முள்ளம், சான்றோர் கூறிய மெய்யினை மறந்து பொய்யின்பாற் சென்றதென்று, ' அருணிலைவிளக்கத்தில் ' குறிப்பிட்டிருக்கின்றார்.

" மெய்விளக்கே விளக்கல்லால் வேறுவிளக் கில்லையென்றார்
மேலோர் நாளும்
பொய்விளக்கே விளக்கெனவுட் பொங்கிவழி கின்றேனோர்
புதுமை யன்றே
செய்விளக்கும் புகழுடைய சென்னநகர் நண்பர்களே
செப்பக் கேளீர்
நெய்விளக்கே போன்றொருதண் ணொளிவிளக்கு மெரிந்ததுசந்
நிதியின் முன்னே "

இப்பாட்டின் கடைசி இரண்டு அடிகளில் ஆசிரியர், நமிநந்தியடிகள் நாயனார் சரித்திரத்தைக் குறிப்பிட்டிருக்கின்றனர். அறங்களுள் சிறந்த அறங்கள் எவை என்று உசாவும் மாணவனுக்கு ஓர் ஆசிரியர் விடை யிறுப்பார் போன்று, திருவள்ளுவனார் ' ஒன்றாக நல்லது கொல்லாமை மற்றதன், பின்சாரப் பொய்யாமை நன்று ' என்று கூறியுள்ளார். வாய்மையின் சிறப்பைக் கூற வந்த சிலப்பதிகார ஆசிரியராய இளங்கோவடிகள்,

" வாய்மையின் வழாது மன்னுயிர் ஓம்புநர்க்(கு)
யாவதும் உண்டோ எய்தா அரும்பொருள் "

(சிலப்பதிகாரம் 11 : 158 - 159)

என்றார். சுத்தாத்துவித சைவசித்தாந்தச் சிங்கமாகிய மாதவச் சிவஞான சுவாமிகள் காஞ்சிப் புராணத்தில்,

"மெய்யே சிறந்த பெருநலமாம் மெய்யே யெவையும் நிலைபெறுத்தும்
மெய்யால் அழல்கால் கதிர்பிறவும் தத்தந் தொழிலின் விலகாவாம்
மெய்யே யெவைக்கும் இருப்பிடமாம் மெய்யே மெய்யே சிவமாகும்
மெய்யே பிரம பதமுமெனப் புகன்றான் வினைதீர் காசிபனே"
(காஞ்சிப் புராணம்-புராண வரலாற்றுப் படலம் - 16)

என்று கூறியுள்ளனர்.

மக்களிடத்து சாதிப் பிணக்குச் சமயப் பிணக்கு முதலியன இருத்தலாகாது என்ற கருத்து அடிகளிடத்து உண்டு என்பதற்கு ஒரு சான்று தருதும். 'சாதியிலே மதங்களிலே சமய நெறிகளிலே சாத்திரச் சந்தடிகளிலே கோத்திரச் சண்டையிலே, ஆதியிலே, யபிமானித் தலைகின்ற வுலகீர் அலைந்தலைந்து வீணே நீர் அழிதல் அழகலவே......' [திருவருட்பா—உறுதிகூறல்-11] இக்கருத்தினையே திருவாசகத்தைத் திருவாய்மலர்ந்தருளிய மணிவாசகப் பெருந்தகையார், "சாதிகுலம் பிறப்பென்னுஞ் சுழிப்பட்டுத் தடுமாறும், ஆதமிலி நாயேனை அல்லலறுத் தாட்கொண்டு..." [திருவாசகம் கண்டபத்து-5] எனத் திருவாய்மலர்ந்தருளினார். திருநாவுக்கரசரும், "சாத்திரம் பல பேசும் சழக்கர்காள் கோத்திரமும் குலமும் கொண்டு என் செய்வீர்......" [திருமாற்பேறு : திருக்குறுந்தொகை-3] எனக் கூறிப் போந்தார். ஒருவரைக் குணநலம் பற்றிப் போற்ற வேண்டுமேயொழிய அன்னார் குலநலம் ஒன்றை மட்டுங்கொண்டு போற்றலாகாது. "பிறப்பொக்கும் எல்லா வுயிர்க்கும் சிறப்பொவ்வா, செய்தொழில் வேற்றுமை யான்" என்பது பொதுமறையன்றோ !

இனி அடிகளின் கலைஞானத்தை ஒரு சிறிது ஆராய்வாம். அடிகளார் சைவ சமயாசாரியர் நால்வரைத்

தமது ஞானாசாரியர்களாகக் கொண்டுள்ளார் என்பது அவர், அவர்கள் மீது பாடிய அருண்மாலையால் விளங்கப்பெறும். இராமலிங்கர் தேவார திருவாசகங்களுக்கு ஓர் உரை கண்டவர் என்று கூறுதல் புனைந்துரையாகாது. 'முன்னோர் மொழிபொருளே யன்றி யவர் மொழியும், பொன்னே போற் போற்றுவம்' என்பதற்கிலக்காக இவர் தேவாரங்களின்கருத் துக்களையும், மணிவாசகப் பெருந்தகையார் திருவாய்மலர்ந் தருளிய திருவாசகத்தின் கருத்துக்களையும், சொற்களையும், அடிகளையும் பொன்னேபோல் போற்றித் தாம் பாடிய பாக் களுள் அமைத்துள்ளார். அவைகட்குச் சில உதாரணம் ஈண்டுத் தருவாம்.

"கேட்டாரு மறியாதான் கேடொன் றில்லான்
கிளையிலான் கேளாதே யெல்லாங் கேட்டான்
நாட்டார்கள் விழித்திருப்ப ஞாலத் துள்ளே
நாயினுக்குத் தவிசிட்டு நாயி னேற்கே
காட்டா தனவெல்லாங் காட்டிப் பின்னுங்
கேளா தனவெல்லாங் கேட்பித் தென்னை
மீட்டேயும் பிறவாமற் காத்தாட் கொண்டான்
எம்பெருமான் செய்திட்ட விச்சை தானே"

(திருச்சதகம் - 28)

இப்பாட்டில் வாதவூர் அடிகள் இறைவன் தம்மை ஆட் கொண்டது நாயினுக்குத் தவிசிட்டதை ஒக்கும் என்று தமது சிறுமையினையும், இறைவன் பெருங்கருணைத் திறத் தினையும் விதந்து கூறுகின்றார். அதுவுமன்றி நாட்டார்கள் விழித்திருப்ப ஞாலத்துள் இறைவன் தமக்குக் காட்டாதன வெல்லாம் காட்டிக் கேளாதனவெல்லாம் கேட்பித்து மறு முறையும் பிறவா வண்ணம் தம்மைக் காத்து ஆட்கொண்டா னென்றும் இது பெரிய வியப்பென்றும் கூறுகின்றார். இப்

பாட்டின் கருத்தினையும் உவமையினையும் இராமலிங்க அடி களார் பொன்போல் போற்றுகின்றனர். இதனை,

" நாய்க்கு மோர்தவி சிட்டுப்பொன் மாமுடி
நன்று சூட்டினை யென்றுநின் னன்பர்கள்
வாய்க்கு வந்த படிபல பேசவே
மதியி லேனையும் மன்னருட் சத்தியாந்
தாய்க்குக் காட்டிநற் றண்ணமு தூட்டியோர்
தவள மாடப்பொன் மண்டபத் தேற்றியே
சேய்க்கு நேரவென் கையிற்பொற் கங்கணந்
திகழக் கட்டினை யென்னைநின் செய்கையே "

(திருவருட்பா : தனிப்பாடல் - 72)

என்னும் பாடலால் அறிக. மாணிக்கவாசகர் கூறிய முத்தி நிலையையே சைவ சித்தாந்த சாத்திரங்களும் கூறும். அஃதாவது, பசுவானது பதியினால் ஆட்கொள்ளப் பட்டால் பாசமானது விலக்கப்பெற்றுப் பதித்தன்மை அடையும் என்பதாம். இக்கருத்தை நாம் திருவாசகத்தில் பலவிடங்களில் காணலாம்.

" அவமாய தேவர் அவகதியில் அழுந்தாமே
பவமாயங் காத்தென்னை யாண்டுகொண்ட பரஞ்சோதி
நவமாய செஞ்சுடர் நல்குதலு நாமொழிந்து
சிவமான வாபாடித் தெள்ளேணங் கொட்டாமோ "

(திருத்தெள்ளேணம் - 4)

" சித்தமலம் அறுவித்துச் சிவமாக்கி யெனையாண்ட "

(அச்சோப்பதிகம் - 1)

இக்கருத்தையே இராமலிங்கரும் பின்பற்றுகின்றனர் என்பதை,

" இருமையும் ஒருமை தன்னில் ஈந்தனை யெந்தா யுன்றன்
பெருமையென் னென்று நான்தான் பேசுவேன் பேத மின்றி

உரிமையால் யானும் நீயும் ஒன்றெனக் கலந்து கொண்ட
ஒருமையை நினைக்கின் றேனென் னுள்ளகந் தழைக்கின்றேனே ''
(திருவருட்பா : கைம்மாறின்மை - 10)

என்பதால் அறியலாகும்.

நாயன்மார்களும் ஆழ்வார்களும் பாடியது போல அடிகளுந் தம்மைத் தலைவியாகவும் கடவுளைத் தலைவராகவும் கொண்டு அகப்பொருட்டுறையாகப் பல செய்யுட்களைப் பாடியுள்ளனர். அவைகளுள் இங்கித மாலை யென்பது ஒன்றாகும். இங்கிதம் என்பதற்குக் குறிப்பு என்பது பொருளாகும். திருக்குறளில் பெரியாரைத் துணைக்கோடல் என்னும் அதிகாரத்தில் இரண்டாங் குறளுக்கு உரை கூறப்போந்த பரிமேலழகர் ' இங்கிதம்-குறிப்பானிகழும் உறுப்பின் தொழில் ' என்றார். இங்கே இங்கித மென்பது தாருகா வனத்து முனிவர் பத்தினிகளின் செருக்கினையடக்க வேண்டுமென்ற நோக்கத்துடன் சிவபெருமான் பிட்சாடன வேடம் பூண்டுவர அம்மங்கையர் அப்பெருமானை உள்ளுறையோடு கேட்ட வினாக்களுக்கு அப்பெருமான் இறுத்த விடையாகும். கடவுள் மானிடப் பெண்டிருடன் உரையாடல் பொருந்துமோ என ஐயங்கொள்வோர்க்கு ' ஆம் ; பொருத்த முடைத்தே ' எனக் கூறுவதுபோல இதற்குத் தொல்காப்பியச் சூத்திரம் இடந்தருகின்றது.

" காமப் பகுதி கடவுளும் வரையார்
ஏனோர் பாங்கினு மென்மனார் புலவர் ''
(தொல்காப்பியம், புறத்திணை - 28)

என்ற சூத்திரத்திற்கு விசேடவுரை கூறப்போந்த ஆசிரியர் உச்சிமேற் புலவர்கொள் நச்சினார்க்கினியர் காமப் பகுதி யென்ற தொடர்க்கு உரை கூறுங்கால் " அது கடவுண் மாட்டுக் கடவுட் பெண்டிர் நயப்பனவும், அவர்மாட்டு மானிடப் பெண்டிர் நயப்பனவும், கடவுண் மானிடப் பெண்டிரை

நயப்பனவும் பிறவுமாம்" என்றனர். இக்கருத்தினையே புறப் பொருள் வெண்பாமாலை ஆசிரியராய ஐயனாரிதனார் கடவுண் மாட்டு மானிடப்பெண்டிர் நயந்த பக்கம் என்ற துறையில் "முக்கணான் முயக்கம் வேட்ட, மக்கட் பெண்டிர் மலிவுரைத் தன்று" [பு. வெ. மாலை—237] எனக் கூறியுள்ளார்.

இவ்விலக்கிய மாலையில் ஒரு செய்யுளை ஈண்டு ஆராய்வோம்.

"தன்னந் தனியா யிங்குநிற்குஞ் சாமி யிவரூ ரொற்றியதாம்
அன்னந் தருவீர் என்றார்நான் அழைத்தேன் நின்னை அன்னமிட
முன்னம் பசிபோ யிற்றென்றார் முன்னின்று அகன்றேன் இவ்வன்னம்
இன்னம் தருவாய் என்கின்றார் இதுதான் சேடி என்னேடீ"

இச்செய்யுள் தலைவி தோழிக்குக் கூறியதாகும். தலைவி தன் தோழியை அழைத்து, "தோழி! இங்கே தனியாக நிற்கும் இவர் ஊர் திருவொற்றியூராம். இவர் நம் அகத்து வந்து அன்னம் தாருங்கள் என்றார். அவருக்கு அன்னம் இடுதற் பொருட்டு யான் உன்னை அழைத்தேன். அதைக் கேட்ட வுடனே அவர் முன்னிருந்த பசி போய்விட்டதென்றார். அவர் அவ்வாறு கூறவே நான் அவ்விடம் விட்டகன்றேன். உடனே அவர் அந்த அன்னத்தை இன்னம் ஒருமுறை தரு வாய் என்றார். இதன் காரணம் யாதோ அறியேன்" என்றாள் தலைவி, என்பது இச்செய்யுளின் பொழிப்பாகும். இப்பாட்டி லுள்ள குறிப்பு யாதோவெனில், தலைவி தோழியை அழைத்த இன்குரலோசையே தன் பசியைப் போக்கிற்று என்று கூறு வார், "பசி போயிற்றென்றார்." தலைவி அவ்விடத்தை விட் டகன்றதனால், அவ்வன்னநடையை நோக்கியவர், அந் நடையை மறுமுறையும் கண்டு களிக்கவேண்டும் என்னும் கருத்தினால் "இவ்வன்னம் இன்னம் தருவாய்" என்றார். ஈண்டு அன்னம் என்பது தலைவியின் அன்னநடையைக் குறிப்பிட்டதாகும். எனவே பிச்சைக்கு வந்தவர் தலைவியின்

இன்குரலோசையும் அன்னநடையுமே தமக்கு அன்னமாக (உணவாக)க் கொண்டார் என்பது போதரும்.

இதுகாறும் கூறியவற்றின் தொகுப்புரையினைத் தருவாம். நம் நாட்டுக் கவிகள் எழுதிய நூல்களுக்குப் பல ஆராய்ச்சிக் கட்டுரைகளும் நூல்களும் வெளிவருதல் வேண்டும். இராமலிங்க அடிகள் பணிவுடைமை, வாய்மை, கொல்லாமை முதலிய அறங்களைச் சிறந்த அறங்களாகக் கொண்டிருந்தனர். அவர் சமயக் கோட்பாட்டில் சமரச நிலையுடையவர்; மக்களிடத்துச் சாதிப் பிணக்கும் சமயப் பிணக்கும் ஒழிய வேண்டும் என்னும் கருத்துடையவர்; அன்னவர் கலை ஞானத்தை நோக்கின் அவர் சைவ சமயாசாரியர்களைத் தமக்கு ஞான குரவர்களாகக் கொண்டதனோடமையாது அன்னவரின் வாக்கையும் போக்கையும் கையாண்டுள்ளார்; அகப்பொருள் துறையுள் வைத்துப் பல கவிகள் பாடியுள்ளார்; அவற்றுள் தலையாயது இங்கித மாலையாகும். அடிகளுடைய பாக்களைப் படிக்கும்போது அன்னவரை ஒரு சித்தரெனக் கூறுவதோ, மருத்துவரெனக் கூறுவதோ, கவிஞரெனக் கூறுவதோ, சமரச சன்மார்க்க நிலையுடையோரெனக் கூறுவதோ, அன்றித் தத்துவப் பிரகாசரெனக் கூறுவதோ அவரை எவ்வாறு கூறுவது சிறப்புடைத்தென்பதை யான் அறியேன். ஆனால் மேலே காட்டிய நலங்கள் அனைத்தும் ஒருங்கு வாய்க்கப்பெற்ற ஒரு சான்றோரென்போனுகில் அது புனைந்துரையாகாது. தமிழ் நன்மக்கள் அனைவரும், பன்னிரு திருமுறைகளையும், இராமலிங்கரின் திருப்பாடல்களையும், பிற சாத்திரத் தோத்திரங்களையும் ஆர்ந்து ஓர்ந்து கூர்ந்து கற்று, இன்புற்று, அவ்வவ்வாசிரியர்களுடைய குறிக்கோள்களை நன்கு உணர்ந்து அவர்கள் காட்டிய நெறி நின்று எல்லாம் வல்ல இறைவனது இன்னருளைப் பெற்று உய்வார்களாக.

# 10

## புறநானூறும் இலக்கியமும்

இலக்கியம் என்பது செய்யுள் நடையானும் அன்றி உரை நடையானும் ஆன்றோர் இயற்றிய நூல் எனப் பொருள் படும். இலக்கியம் என்பதனுள் எவ்வகை நூல்கள் அடங்கப் பெறும் என்பதைக் குறித்துப் பல ஆசிரியர் பல்வேறு கருத்துக்களைக் கூறுவர். இதைக் குறித்து ஆங்கில ஆசிரியர் யாது கூறுகின்றனர் என்பதை முன்னர் நோக்குவோம். தமிழ் இலக்கியத்தைப்பற்றிப் பேசுங்கால், ஆங்கில ஆசிரியர் கூறிய கருத்துக்களை ஈண்டு மொழிபெயர்த்துக் கூறுதல் பொருத்த முடைத்தோ எனச் சிலர் ஐயுறலாகும். ஆனால் நமது இலக்கணம் மொழிபெயர்த்தலுக்கும் இடம் தருகின்றது.

“ தொகுத்தல் விரித்தல் தொகைவிரி மொழிபெயர்ந்(து)
அதர்ப்பட யாத்தலோ டனைமர பினவே ”

(தொல். மரபியல் - 97)

என்ற நூற்பாவின்படி தொல்காப்பியர் நூல்செய்யும் வகையுள் இம்மொழிபெயர்ப்பினையும் ஒன்றாகக் கூறியுள்ளனர். எனவே ஆங்கில ஆசிரியர் கூறும் கருத்தினை ஈண்டுக் கூறுதல் வழுவன்றாம். மேலும், மேனாட்டு இலக்கியத்திற்கும் நம் நாட்டு இலக்கியத்திற்கும் உள்ள ஒப்புமையினை எடுத்துக் காட்டுவதுடன் புறநானூற்றினின்று நாம் அறியக்கிடக்கும் இலக்கியப் பண்புகள் யாவை என்பதை ஆராய்வதே இக் கட்டுரையின் நோக்கமாகும்.

பொதுவாக மக்கள் அனைவர்க்கும் பயன்படக் கூடியதாய் விளங்கும் நூல்களே இலக்கிய மென்றும், சில குழுவினர் மட்டும் மிக்க ஊக்கத்துடன் ஆராயும் வான நூல், பொருளாதாரம், தத்துவம், வரலாறு முதலியவைகளை இலக்கியம் எனக்கூறுதல் ஆகாதென்றும் அவைகளைச் சாத்திரம் எனக் கூறுதல் வேண்டும் என்றும் கூறுவர் ஹட்சன் (William Henry Hudson) என்ற ஆசிரியர்.[1] ஆனல் ஹாலம் (Hallam) என்பார் இக்கருத்திற்கு நேர் முரணுக, மருத்துவம், சமய நூல், சட்ட நூல் முதலிய நூல் களும் இலக்கியத்தின்பாற்படும் என்பர். மவுல்டன் (Moulton) என்ற ஆசிரியரும் இதே கருத்தினைக் கொண் டுள்ளார்; இலக்கியம் வேறு சாத்திரம் வேறு என வரையறுத்துக் கூற இயலாதென்றும், ஓர் இலக்கியத்தைத் துருவி ஆராயும்போது அதில், சமய நூல், தத்துவம், வரலாறு, மொழி நூல் முதலிய பிற சாத்திரங்களும் தோத் திரங்களும் அடங்கப்பெறும் என்றும் கூறுவர்.[2] யாப்பின் வகையைக் கூறப்போந்த தொல்காப்பியனர்,

---

1. " Literature is composed of those books, and of those books only, which, in the first place, by reason of their subject-matter and their mode of treating it, are of general human interest ;......A piece of Literature differs from a specialised treatise on astronomy, political economy or even history." (*William Henry Hudson*)

2. The Study of Literature in its natural development touches some twenty other studies (Theology, Philosophy, History, Philology etc.) distinct and independent. It is obvious that questions of demarcation will arise between the boundaries of these studies and what may be considered the intrinsic study of Literature itself."
*(The Modern Study of Literature—Moulton.)*

"பாட்டுரை நூலே வாய்மொழி பிசியே"[3]

என்ற நூற்பாவில் யாப்பாவது, பாட்டு, உரை, நூல், வாய்மொழி, பிசி, அங்கதம், முதுமொழி என்ற ஏழனடியாகத் தமிழ் நாட்டில் வழங்கும் செய்யுள் மரபாகும் என்பர். மேலே காட்டிய ஏழனுள் பிசி என்பது விடுகதையாகும். உதாரணமாக,

"நீராடான் பார்ப்பான் நிறஞ்செய்யான் நீராடில்
ஊராடு நீரிற்காக் கை"[4]

இவ்விடுகதை நெருப்பினைக் குறிக்கும். இவ் விடுகதைக்கும் ஓர் இலக்கணம் அமைத்து அதுவும் செய்யுளில் ஒன்றாக அடங்கப்பெறும் எனக் கூறியதால், ஓர் இலக்கியம் என்பது பலதிறப்பட்ட பாக்களையும் பலதிறப்பட்ட நூல்களையும் கொண்டதாகும் என்பது பெறப்படுகின்றது. திரு. T. செல்வகேசவராய முதலியார் M.A. அவர்கள் இலக்கியம் என்பது இன்னதென்பதை அழகாக விளக்கியுள்ளனர். "ஒரு பாஷைக்கே உரிய இலக்கியமென்பது......அந்தப் பாஷை வழங்கு நிலத்தின்கண் நிகழ் பொருள்களை, உள்ளன உள்ளவாறேயாக, புனைந்துரை வகையானாக கவிவல்லாரும் உரைநடை வல்லாரும் கூறிப்போந்த நூல்களின் தொகுதியாம். அவைதாம் சிறுகதைகளும், பெருங்கதைகளும், கற்பிதக்கதைகளும், தேச சரிதங்களும், அகப்பொருளும், புறப்பொருளும் முதலாகப் பல துறைப்படும்."[5] புறப்பொருள்பற்றிய புறநானூறு என்ற நூலில், சேர சோழ

3. தொல். செய்யுளியல். நூ. 79.

4. தொல். செய்யுளியல், நூ. 176. பேராசிரியர் மேற்கோள்.

5. Tamil-An Essay by Mr. T. Chelvakesavaraya Mudaliar M.A. (p. 31).

பாண்டியர், கடையெழு வள்ளல்கள் முதலியோர் வரலாறு, சோதிடம், சகுனம், கனநூல், வானநூல் முதலிய நூல்களைப்பற்றிய குறிப்புக்கள் காணப்படுகின்றன. எனவே புறநானூறு என்பது ஒரு தனிப்பட்ட இலக்கியமாகும் என்பது

இனி, ஓர் இலக்கியத்திற்குரிய பண்புகள் யாவை என்பதைக் காண்போம். ஒரு மொழியின் வாயிலாக வாழ்க்கை முறையினை எடுத்துக் காட்டுவது இலக்கியமாகும் என்றார் ஹட்சன் (Hudson) என்ற ஆசிரியர்.6 சில ஆசிரியர் தாம் இயற்றிய நூல்களுள் தங்கள் குறிக்கோளினையும், வாழ்க்கையின் நிகழ்ச்சிகளையும், குறிப்பானும் வெளிப்படையானும் குறிப்பதுண்டு. ஆகவே நாம் அந்நூல்களைப் படிக்கும்போது அவ்வாசிரியர்களின் உள்ளக்கிடக்கையினை அறிய இயல்கின்றது. ஆதலால் ஓர் ஆசிரியர் இன்னார் இனையர் என்பதை அவரது நூல் வாயிலாக அறிகின்றோம். ஒரு நூல் எழுதும் ஆசிரியர் ஒரு பொருளைப்பற்றிக் கூறுங்கால், தாம் நேராகக் கண்ட அப்பொருளின் பண்பினை உள்ளதை உள்ளவாறே கூறுதல் வேண்டும். இதனை ஆங்கிலத்தில் "The principle of Sincerity"7 என்பர்.

---

6. "Literature is thus fundamentally an expression of life through the medium of language" (An Introduction to the study of Literature by Hudson. p. 11)

7. "Involved in this, yet calling for separate emphasis, is the great principle, first enunciated by Plato, that the foundation of all good and lasting work in *literature* is *entire sincerity* to *oneself*, to one's own experience of life and to the truth of things as one is privileged to see it" (W. H. Hudson).

ஓர் இலக்கியத்தில் சிறந்த கருத்துக்கள் பொதிந்திருக்கக் காணலாம் என்பர் எமர்சன் (Emerson) என்ற ஆசிரியர்.[8] சிறந்த இலக்கியத்தினால் மக்கள் அறிவு கூர்மையடைய அவர் ஞானத்தைப் பெறுவர்.[9] மக்களுக்கு நல்லொழுக்கம் புகட்டுவதில் இது ஒரு சிறந்த கருவியாக விளங்குகின்றது.[10] இலக்கியத்தின் மற்றோர் சிறப்பு யாதெனில் அது மக்களுக்கு இயற்கையின் எழில் நலத்தை எடுத்துக் காட்டி அதைப் படைத்த இறைவனின் தன்மையினை நினைவூட்டி அவர்களை நல்லாற்றுப் படுத்தும் நெறியாகவும் உள்ளது.[11] இதுகாறுங் கூறியவற்றால் இலக்கியம் என்பது ஒரு மொழியின் வாயிலாக வாழ்க்கை முறையினை மக்களுக்கு எடுத்துக்காட்டவல்லது என்பதும், நூலாசிரியன் நூல் எழுதுங்கால் தான் கண்ட பொருளின் தன்மையை உள்ளது உள்ளவாறே கிளத்தல் வேண்டும் என்பதும், சிறந்த கருத்துக்களைக் கொண்டது

8. "Literature is a record of best thoughts"(Emerson)

9. "In the words of Cardinal Newman-the object of literature in education is to open the mind, to correct it, to refine it, to enable it to comprehend and digest its knowledge, to give it power over its own faculties, application, flexibility. method, critical exactness, sagacity, address and expression ". (Select essays from the writings of Viscount Morley edited by H. G. Rawlinson, M.A., p. 51)

10. "Literature is one of the most powerful instruments for forming character " (Viscount Morley).

11. "Literature, so far as it is Literature, is an ' apocalypse of Nature ', a revealing of the ' open secret.' It may well enough be named a ' continuous revelation ' of the Godlike in the Terrestrial and Common " (Hero as Man of Letters—Thomas Carlyle)

இலக்கியம் என்பதும், அது மக்கள் அறிவினைக் கூர்மையாக்கி அவர்கள் ஞானம் பெறுதற்குக் கருவியாக விளங்கி, நல்லொழுக்கத்தில் புகும்படி செய்து, அவர்களுக்கு இயற்கையின் எழில் நலத்தை எடுத்துக் காட்டுவதுடன், அதனைப் படைத்த பரம்பொருளின் பெருங்கருணைத் திறத்தினையும் விளக்கி, அவர்களை நல்லாற்றுப்படுத்தும் நெறியாகவும் விளங்குகின்றது என்பதும் பெறப்படுகின்றன.

மேலே கூறப்பட்ட இலக்கியப் பண்புகள் அனைத்தும் நாம் புறநானூற்றில் காணலாம். புலவர் பெருமக்கள் தம் பாடல்களுள் அவர்களது வாழ்க்கை வரலாற்றினைக் குறிப்பானும் வெளிப்படையானும் எடுத்துக்காட்டி அப்பாக்கள் மூலம் வாழ்க்கை முறையினை மக்களுக்கு விளக்கிக் கூறுவர் என்பது முன்னரே கூறப்பட்டது. பரணர் என்ற புலவர் ஓர் இரவலனைக் கடையெழு வள்ளல்களுள் ஒருவனாகிய பேகன் என்பானிடத்து ஆற்றுப்படுத்துகின்றார். 'இரவலனே! பேகன் என்ற இவ்வள்ளலைக் காணும் முன்னர் யான் நின்னினும் வறுமையுடையேனாக இருந்தேன். ஆனால் அவனை அடுத்த பின்னர் அவ்வறுமை ஒழிந்து தற்போது நல்ல நிலையில் இருக்கின்றேன். மயிலுக்குப் போர்வை அளித்த எம் இறைவனாகிய பேகனது கொடைத்திறம் சாலவும் போற்றற்குரியது. அவனது கொடையின் நோக்கம் கொடுத்தல் நல்லதெனக் கொண்டு, மறுபிறப்பை நோக்கியதன்று; பிறரது வறுமையை நோக்கிய தாகும்' என்றார் பரணர்.

" .........கடும்பசி யிரவல
வெல்வே லண்ணற் காணா வூங்கே
நின்னினும் புல்லியேம் மன்னே ; இனியே
இன்னே மாயினேம் மன்னே என்றும்
............கலிமான் பேக

*னெத்துணை யாயினும் ஈத்தல் நன்றென*
*மறுமை நோக்கின்றோ அன்றே*
*பிறர், வறுமை நோக்கின்றவன் கைவண் மையே ''* (141)

இச் செய்யுளில் புலவர் தமது வாழ்க்கை வரலாற்றைக் கூறுவதைக் காண்க. உலகில் சிலர், இரப்போர்க்குக் கொடுத்தால் இம்மையிற் புகழுண்டு என்ற நோக்கத்தாலும், சிலர் மறுமைக்குப் பயன் உண்டு என்ற நோக்கத்தாலும் அறம் செய்வர். ஆனால் பேகனின் கைவண்மை அத்தகைய தன்று. அறம் செய்தல் நல்லதென்றும் அது மறுமைக்குப் பயன்தரும் என்பதையும் அவன் கருதினானில்லை. பிறரது வறுமையைப் போக்குவதே அவனது குறிக்கோளாகும். புறநானூற்றில் இதே கருத்துடைய " இம்மைச் செய்தது மறுமைக் காமெனும் " (134) என்ற ஒரு செய்யுள் உள்ளது. இதில் கடையெழு வள்ளல்களுள் ஒருவனாகிய ஆய் என்ற வள்ளல் இப் பிறப்பிற் செய்தது மறுபிறவிக்குப் பயன்படும் எனக்கருதி, பொருளை விலையாகக் கொடுத்து அறம் கொள்ளும் வணிகன் அல்லன், அவனது கைவண்மை சான்றோர் சென்ற நெறியைப் பின்பற்றியதாகும் எனக் கூறப்பட்டுள்ளது. இத்தகைய பாக்கள், மக்கள் தங்கள் வாழ்க்கையில் எத்தகைய குறிக்கோளுடன் அறம்செய்தல் வேண்டும் என்பதை எடுத்துக் காட்டுகின்றன.

இலக்கியத்தின் மற்றோர் பண்பாகிய உள்ளதை உள்ள வாறே கிளத்தல் " The principle of sincerity " என்பதற்குப் புறத்தில் பல உதாரணங்கள் உள்ளன அவற்றுள் ஈண்டு ஒன்றினை மட்டும் குறிப்பிடுகின்றேன். பெருஞ்சித்திரனார் என்ற புலவர் தமது வறுமையைப் போக்கிக்கொள்வான் வேண்டி, குமணன் என்ற வள்ளலிடம்

சென்று தம் தாய், மனையாள் முதலியோர் வறுமைப் பிணியால் பீடிக்கப்பட்டு வருந்துவதை உள்ளது உள்ளவாறே தன்மை நவிற்சியணி ததும்பும் வண்ணம் எடுத்துக் கூறுகின்றார். 'கூர்வேற் குமண! மிக்க வயது முதிர்ந்த என் தாய் தனது வாழ்நாள் முடியவில்லை எனத் தன் வாழ்நாளுடன் வெறுத்துக்கொண்டு கையில் பிடித்த கோலினையே காலாகக்கொண்டு நடந்தும், கண்ணொளி மழுங்குதலான் முற்றத்தினின்று புறப்பட மாட்டாமையாகிய மூப்பினை யுடையாள் ; என் மனையாளோ வெளிின் பசந்த மேனியுடன், மருங்கில் எடுத்த சிறு பிள்ளைகள் பிசைந்து மெல்லுதலால் உலர்ந்த மார்பினை யுடையாளாய் வருந்தி, உணவில்லாமையால் குப்பையில் தானே முளைக்கும் கீரையின் தளிரைக் கொண்டு வந்து உப்பில்லாமையால் வெறும் நீரில் அதை வேகவைத்து, மோரும் சோறும் இன்மையான், அக்கீரையினையே உணவாக உண்டு அழுக்குப்படிந்த கிழிந்த ஆடையினையுடையாளாய் அறக் கடவுளைப் பழித்து நிற்கின்றாள். எனவே இத்தகைய என் தாயும் மனையாளும் பிற சுற்றத்தினரும் மகிழும் வண்ணம் நீ எனக்குப் பரிசில் தருவாயாக. தரும் பரிசு யானையைப் போன்று மிகச் சிறந்ததாயினும் நீ மன மகிழ்ச்சி யின்றிக் கொடுப்பாயாயின் யான் அதனைப் பெற்றுக் கொள்ளேன். கொடுப்பது மிகச் சிறிதே யாயினும் நீ மனம் உவந்து கொடுப்பின் யான் அதனைப் பெற்றுக் கொள்வேன்' என்றார் (159). இவ்வாறு புலவர் தம் வறுமையின் கொடுமையினை உள்ளது உள்ளவாறு கூறுகின்ற திறம் போற்றற் குரியதன்றோ! "களிறு பெறினுந் தவிர்ந்துவிடு பரிசில் கொள்ளலெ னுவந்து நீ, யின்புற விடுதி யாயிற் சிறிது, குன்றியுங் கொள்வல் கூர்வேற் குமண" என்ற வரிகள் புலவரின் வறுமையிற் செம்மையாம் பண்பினைப் புலப்படுத்து கின்றன.

ஓர் இலக்கியம் சிறந்த கருத்துக்களைத் தன்னிடத்தே கொண்டு விளங்கவேண்டும் என்பது முன்னரே கூறப் பட்டது. புறத்தில் சிறந்த கருத்துக்கள் அடங்கிய பல பாக்கள் உள்ளன. கீழ்க்காணும் வரிகள் சிறந்த எடுத்துக் காட்டாக விளங்குகின்றன.

" நிலம் பெயரினும் நின்சொற் பெயரல் " (3)

" நீரின் றமையா யாக்கைக் கெல்லாம்
உண்டி கொடுத்தோ ருயிர்கொடுத் தோரே " (18)

" புலவர் பாடும் புகழுடையோர் விசும்பின்
வலவ னேவா வான வூர்தி, யெய்துப " (27)

" அறனும் பொருளு மின்பமு மூன்றும்
ஆற்றும் பெருமநின் செல்வம்
ஆற்ரு மைநிற் போற்ரு மையே " (28)

" நிலம்புடை பெயர்வ தாயினும் ஒருவன்
செய்தி கொன்றோர்க் குய்தி யில்லென
அறம்பா டிற்றே " (34)

" அறநெறி முதற்றே யரசின் கொற்றம் " (55)

" வாழ்தல் வேண்டிப் பொய்கூறேன் மெய்கூறுவல் " (139)

" நெல்லு முயிரன்றே நீரு முயிரன்றே
மன்ன னுயிர்த்தே மலர்தலை யுலகம் " (186)

" செல்வத்துப் பயனே யீதல்
துய்ப்பே மெனினே தப்புந பலவே " (189)

" யாது மூரே யாவருங் கேளிர்
தீதும் நன்றும் பிறர்தர வாரா " (192)

" ஈயென இரத்தல் இழிந்தன் றதனெதிர்
ஈயே னென்றல் அதனினு மிழிந்தன்று

கொள்ளெனக் கொடுத்தல் உயர்ந்தன் றதனெதிர்
கொள்ளே னென்றல் அதனினு முயர்ந்தன்று". (204)

இலக்கியம் மக்களுக்கு அறிவு கொளுத்துகின்றது என்பதனை விளக்கப் புறத்தில் பல செய்யுட்கள் உள. பொருண்மொழிக்காஞ்சி என்ற துறையில் நரிவெரூஉத் தலையார் என்ற புலவர் பாடிய பாட்டினை நோக்குக. மக்களுக்கு இது ஒரு சிறந்த அறவுரையாக விளங்குகின்றது.

" நல்லது செய்த லாற்றீ ராயினும்
அல்லது செய்த லோம்புமின் அதுதான்
எல்லாரு முவப்ப தன்றியும்
நல்லாற்றுப் படூஉ நெறியுமா ரதுவே" (195)

ஒருவன் தனது வாழ்க்கையில் இதனை மறத்தலாகாது.

மக்கள் இயற்கையன்னையின் எழில் நலத்தைக் கண்டு களிப்பதற்கும், இல்லறம் நடத்திப் பின்னர் நிலையாமை உணர்ந்து மெய்யுணர்ச்சி பெறுவதற்கும் இலக்கியம் எவ்வாறு பயன்படுகின்றது என்பதை ஆராய்வோம். பழந்தமிழ் மக்கள் இயற்கையிலுள்ள அழகினைக் கண்டு இன்புற்று, பின்னர் அதனை உண்டாக்கிய கடவுள் ஒருவர் இருத்தல் வேண்டுமென்ற உணர்வுகொண்டு, யான் என்னும் அகப்பற்றினையும் எனது என்ற புறப்பற்றினையும் விட்டு, அப் பற்றற்றான் பற்றினைப் பற்ற விழைந்தனர் என்பதனை விளக்கச் சங்க இலக்கியங்களுள் பல சான்றுகள் உள்ளன. புறநானூற்றில் பல புலவர்கள் ஆறு, மலை, கடல், ஞாயிறு, திங்கள், மாரி முதலியவைகளைக் கூர்ந்து கண்டு அவைகளைச் செம்மையாக வருணித்துள்ளனர். பாரியின் பறம்பு மலையினையும் அவனது அரணின் சிறப்பையும் கபிலர் வருணிப்பதைக் காண்க. கருவூர்க் கந்தப்பிள்ளை சாத்தனார் என்ற புலவர் புறம் (168) ஆம் செய்யுளில் குதிரைமலையின் சிறப்

பிணையும் ஆண்டு வாழும் குறவர் இயல்பினையும் நன்கு வருணித்துள்ளார். சில புலவர் இல்லறத்தினும் துறவறமே சிறந்தது எனக் கூறியுள்ளனர். தவத்தின் மாட்சியினை வான்மீகியார் என்ற புலவர் சிறப்பித்துப் பாடியது ஈண்டு

" பருதி சூழ்ந்தஇப் பயங்கெழு மாநிலம்
ஒருபக லெழுவ ரெய்தி யற்றே
வையமுந் தவமுந் தூக்கின் தவத்துக்
கையவி யனைத்து மாற்று தாகலின்
கைவிட் டனரே காதல ரதனால்
விட்டோரை விடாஅள் திருவே
விடாஅ தோரிவள் விடப்பட் டோரே " (358)

'சூரியன் சூழ்ந்து வருதலான் பயன் மிக்க இம் மாநிலம் ஒரே நாளில் ஏழு மன்னரைத் தனக்குத் தலைவராகப் பெற்றுள்ளது. ஏனெனில் ஒருநாள் கழிவதற்குள் அதே நாளில் ஏழு மன்னரும் ஒருவர்பின் ஒருவராக மாண்டனர். (இதனால் செல்வநிலையாமையினையும் யாக்கைநிலையாமையினை யும் குறிப்பிட்டார்.) இத்தகைய நிலையாமையைத் தன்னிடத்தே கொண்டுள்ள இவ்வுலகினையும் வீட்டிற்கு வாயிலாகவுடைய தவத்தினையும் சீர்தூக்கிப் பார்க்கின், இவ்வுலகம் ஒரு சிறு கடுகு அளவுள்ள நிறைக்கும் தவத்திற்கு ஒப்பாகாது. இதுகாறும் உலகப்பற்றில் தோய்ந்த மக்கள் இந்நிலையாமையை அறிந்து அவ்வுலகப்பற்றினை விடுத்து, துறவற நெறியைக் கையாண்டனர். இவ்வுலகப் பற்றினை விட்டோர்பால் திருமகள் உறைவாள். அப்பற்றினை விடாதவரைத் தான் விட்டு நீங்குவாள்' என்பது இப் பாட்டின் பொருளாகும். துறவறத்தை நோக்க இவ் வுலகவாழ்க்கை கடுகத்தனையும் ஒப்பாகாது என்ற கருத்தினைத் திருத்தக்கதேவரும் " ஏமநீ ருலகமோ ரிம்மிப்

பாலெனை, நாமவேல் நரபதி நீக்கி நன்கலந், தூமமார் மாலையுந் துறக்கின் றனரோ......."[12] என வற்புறுத்தியுள்ளனர். உலகப் பற்றினை விட்டவரைத் திருமகள் சார்வாள் என்ற கருத்தினைக் குலசேகராழ்வார்,

"நின்னையே தான்வேண்டி நீள்செல்வம் வேண்டாதான்
தன்னையே தான்வேண்டுஞ் செல்வம் போல்"[13]

எனக் கூறுவதைக் காண்க. எனவே மக்கள் மெய்யுணர்வு பெறுதற்கு வாயிலாக உள்ளது இலக்கியமாகும் என்பது போதரும்.

இலக்கியம் என்பதில், தனிநிலைச் செய்யுள், தொடர் நிலைச் செய்யுள், உரைநடை, நாடகம் முதலிய அனைத்தும் அடங்கப்பெறும். தமிழ் இலக்கியத்தில் மிகுதியாகச் செய்யுள் நடையில் அமைந்த நூல்களே உள்ளன. இதற்குக் காரணம் உரைநடைக்கு அமையாத சில சிறப்பு இயல்புகள் செய்யுளுக்கு உண்டு. சில்வகை யெழுத்தில் பல்வகைப் பொருளைச் செறித்து இனிது விளக்குவது செய்யுளாகும். மக்கள் எளிதாகத் தம் நினைவில் அமைத்துக் கொள்ளும் இயல்புடைமை, ஓசையோடு கூடிய இனிமை ஆகிய இவ்விரு பண்புகள் செய்யுளுக்கே சிறப்பாக அமைந்துள்ளன. இனி, செய்யுளின் தோற்றத்திற்கு யாது காரணம் என்பதை நோக்குவோம். ஒரு புலவன் தன் மனத்தில் தோன்றிய எண்ணங்களையும் மனோபாவங்களையும் செய்யுள் மூலம் எடுத்துக் கூறுகின்றான்.[14] ஓவியக்காரன் ஒருவன் தான் தீட்டும் ஓவியத்திற்குப் பலவகை நிறங்கள் கொடுத்து அழகு

---

12. சீவகசிந்தாமணி - செய்யுள், 3027.

13. நாலாயிரத் திவ்யப் பிரபந்தம்-பெருமாள் திருமொழி 5:9

14. "Poetry in a general sense may be defined as the expression of the imagination" [Shelley]

செய்வதுபோல் ஒரு புலவனும் பல சொற்கள் மூலம் தன் பாக்களைச் சித்திரித்துக் காட்டுகின்றான்.[15] ஒரு செய்யுளானது எழுத்து, அசை, சீர், தளை, அடி, தொடை ஆகிய இவற்றால் ஆக்கப்படுவதால் நாம் அதில் ஓர் ஓசை இன்பத்தைக் காண்கின்றோம். இதனையே ஜான்சன் (Johnson) என்ற ஆசிரியர் "Poetry is a metrical Composition" என்பர். கருத்துக்களை இசையுடன் எடுத்துக் கூறுவதே செய்யுளாகும் என்பர் கார்லைல் (Carlyle).[16] செய்யுள் சந்தம் என்ற ஓசையோடு அழகுடன் விளங்குவதாகும்.[17] புறநானூற்றில் இவ்வித ஓசை இன்பம் பயக்கக்கூடிய செய்யுட்களும் எதுகை, மோனை முதலியவை நிறைந்த செய்யுட்களும் உள்ளன.

> "நிலனெளி மருங்கின் நீர்நிலை பெருகத்
> தட்டோ ரம்ம விவட்டட் டோரே
> தள்ளா தோரிவட் டள்ளா தோரே." (18)

இவ்வரிகளில் வந்துள்ள ஓசை இன்பத்தினை நோக்குக. பரணர் பாடிய சில பாக்களுள் பல அடிகளில் எதுகையினைக் காணலாம்.

> "மடத்தகை மாமயில் பனிக்குமென் றருளிப்
> படாஅ மீத்த கெடாஅ நல்லிசைக்
> கடாஅ யானைக் கலிமான் பேக." (145)

15. "By poetry we mean the art of employing words in such a manner as to produce an illusion on the imagination, the art of doing by means of words what the painter does by means of colours" [Macaulay]

16. "Poetry, therefore, we will call Musical thought" [The hero as poet-Carlyle]

17. "Poetry is the rhythmic creation of beauty" [Edgar Allan Poe]

புறநானூற்றிலுள்ள செய்யுட்கள் ஆசிரியப் பாவால் ஆக்கப் பட்டன. "அகவ லென்ப தாசிரி யம்மே"[18] என்ற நூற்பா விற்கு உரை எழுதப்போந்த பேராசிரியர் அகவற்பாவின் இலக்கணம் இன்னதெனக் கூறுகின்றார். "அகவிக் கூறுத லான் 'அகவல்' எனக் கூறப்பட்டது; அஃதாவது கூற்றும் மாற்றமுமாகி ஒருவன் கேட்ப அவற்கு ஒன்று செப்பிக் கூறாது தாங்கருதியவாறெல்லாம் வரையாது சொல்வதோ ராறும் உண்டு. அதனை வழக்கினுள்ளார் அழைத்த லென்றுஞ் சொல்லுப; அங்ஙனஞ் சொல்லுவார் சொல்லின்கண் எல்லாம் தொடர்ந்து கிடந்த ஓசை அகவலெனப்படும்; அவை, தச்சுவினை மாக்கள்கண்ணும், களம்பாடும் வினைஞர் கண்ணும், கட்டுங் கழங்குமிட்டு உரைப்பார்கண்ணும், தம்மில் உறழ்ந்துரைப்பார்கண்ணும், பூசலிசைப்பார்கண்ணும், கேட்கப்படும்."

இனி, செய்யுள் வகையினை நோக்குவோம். மேனாட்டு ஆசிரியர், செய்யுள் இரண்டு வகைப்படும் என்பர். அவற்றுள் ஒன்று, ஒரு புலவன் தனது பாடலுள் தன் வாழ்க்கை வரலாற்றினையும் நிகழ்ச்சிகளையும் அனுபவங்களையும் எடுத்துக் கூறுதல். இதனை 'Subjective Poetry' என்பர். மற்றொன்று, ஒரு புலவன் தன்னைப் பற்றி யல்லாமல் உலகத்துட் காணும் நிகழ்ச்சிகளையும் அவைகளின் தன்மைகளையும் எடுத்துக் கூறுதல். இதனை 'Objective Poetry' என்பர். இந்த இருவகைப் பிரிவுகளுக்கும் புறநானூற்றினின்று பல செய்யுட்களை மேற்கோளாக எடுத்துக் காட்டலாம். ஆனால் இந்த இரண்டு பிரிவுகளும் கடுமையாக வரையறுக்கப்பட்ட பிரிவுகள் எனக் கூற இயலாது. ஏனெனில் ஒரு புலவன் தான் பாடிய பாட்டில் தன்னைப்பற்றியும் உலகத்தைப் பற்றி

18. தொல். செய்யுளியல் - நூ. 81.

யும் ஒன்று சேர்த்துப் பாடுதலுங் கூடும். புலவன் தன்னைக் குறித்துப் பாடும் தனிநிலைச் செய்யுட்களை Lyric Poetry என்றும் கூறுவர். யாழுடன் சேர்த்துப் புலவன் பாடுதலின் Lyric Poetry எனக் கூறப்படுகின்றது எனக் கூறுவர் சிலர்.[19] (Lyre=யாழ்). புறநானூற்றில் பாணாற்றுப்படை, புலவராற்றுப்படை முதலிய துறைகளில் வந்துள்ள பல பாக்கள் இவ்வகையுள் அடங்கப்பெறும். புலவன் ஒருவன் தத்துவ சம்பந்தமான கருத்துக்களைத் தனது பாட்டில் அமைத்துப் பாடுவதை Meditative and Philosophical Poetry என்பர். சில ஆங்கில ஆசிரியர் செய்யுளில் தத்துவம் அமைத்துப் பாடுதல் இன்றியமையாததாகும் என்பதனை வற்புறுத்திக் கூறுவர்.[20] தனது பாடல் மூலம் மக்களுக்குப் புலவன் அறவுரை வழங்குவானெனின் அப் பாடலினை மேனாட்டார் Didactic Poetry என்பர். புலவன் பாடும் பாக்களில் தத்துவமும், அறவுரையும் நிறைந்திருக்கும் என்பதை விளக்கப் புறநானூற்றில் பல பாக்கள் உள. செவியறிவுறூஉ, வாயுறைவாழ்த்து முதலிய துறைகளுள் வரும் செய்யுட்கள் மேலே காட்டிய இருவகைப் பகுதிகளுள் அடங்கப்பெறும். தொல்காப்பியத்தில் 'வாயுறைவாழ்த்தைப்' பற்றிய குறிப்பு, புறத்திணையியலிலும், செய்யுளியலிலும், காணக் கிடக்கின்றது. "கொடுப்போர் ஏத்தி"[21] என்ற சூத்திரத்தில் காணும் 'வாயுறைவாழ்த்து' என்ற மக்கட் பகுதியாகிய பாடாண்டிணைக்குரிய துறையினைக் கூறவந்த

---

19. "Lyric Poetry, in the original meaning of the term was Poetry composed to be sung to the accompaniment of lyre or harp" [Hudson]

20. "Philosophy first and poetry which is its highest outcome afterwards" [Browning]

21. தொல். புறத்திணையியல், 35.

நச்சினார்க்கினியர் " இதற்கு ஒரு தலைவன் வேண்டாமையினும் அவற்கு உறுதி பயத்தலைச் சான்றோர் வேண்டி வாய்மொழி மருங்கினான் அவனை வாழ்ச்சிப்படுத்தலின்........." எனக் கூறுவதால் வாயுறைவாழ்த்தென்பது ஒரு தலைவன் வேண்டாமையினும் உறுதி பயக்கும் உண்மையினைச் சான்றோர் அவனுக்கு எடுத்துரைத்தல் என்பது பெறப்படுகின்றது.

" வாயுறை வாழ்த்தே வயங்க நாடின் "22

என்ற நூற்பாவிற்குப் பேராசிரியர் கூறும் உரையினைக் காண்க. " முற்பருவத்துக் கைத்தும் பிற்பருவத்து உறுதி பயக்கும் வேம்பும் கடுவும்போல வெய்யவாய சொல்லினைத் தடையின்றிப் பிற்பயக்கும் எனக் கருதிப் பாதுகாத்துக் கிளக்குங் கிளப்பினான் மெய்யாக அறிவுறுத்துவது வாயுறை வாழ்த்தெனப்படும்." நரிவெரூஉத்தலையார் என்ற புலவர் ஒள்வாட்கோப் பெருஞ்சேரலிரும்பொறைக்குக் கூறிய வாயுறை வாழ்த்து ஈண்டு நோக்கத் தக்கது. 'பெரும! அருளும் அன்புமின்றிப் பாவம் செய்து, நரகத்தைத் தமக்கு இடமாகக் கொள்ளும் பாவிகளோடு நீ சேருதல் கூடாது. ஒரு குழந்தையை வளர்ப்பதுபோல் நீ உனது நாட்டினைப் பாதுகாப்பாயாக ' என்றார்.

" ..................பெரும !
நீயோ ராகலின் நின்னொன்று மொழிவல்
அருளு மன்பு நீக்கி நீங்கா
நிரயங் கொள்பவரொடு ஒன்றாது காவல்
குழவி கொள்பவரி னோம்புமதி
அளிதோ தானேஅது பெறலருங் குரைத்தே." (5)

' இதனுள் நிரயங் கொள்வாரோ டொன்றாது காவலை யோம் பென வேம்பும் கடுவும்போல வெய்தாகக் கூறி அவற்கு

22. தொல். செய்யுளியல், 112

உறுதி பயத்தலின் வாயுறைவாழ்த்தாயிற்று ’ என்பர் நச்சினார்க்கினியர். “ செவியுறைதானே பொங்குதலின்றி ”[23] என்ற சூத்திரத்திற் கூறியபடி ஆடம்பரமின்றிப் பெரியோர் நடுவே அடங்கி வாழ்தல் ஒருவனது கடமையாகும் எனக் கூறி, செவிக்கண் அறிவுறுத்துவது செவியறிவுறூஉவாம். புறப்பொருள் வெண்பாமாலை ஆசிரியர் ‘ மாற்சரியமும் கெடுதலுமில்லாத பெரிய எண்ணத்தை அரசனுக்குச் சொல்லுதல் ’ செவியறிவுறூஉ என்பர். புறநானூற்றில் மதுரை மருதனிளநாகனார் என்ற புலவர் பாண்டியன் இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நன்மாறனுக்குக் கூறும் செவியறிவுறூஉவினைக் காண்க.

“ வேந்துமேம் பட்ட பூந்தார் மாற !

அறநெறி முதற்றே யரசின் கொற்றம்
அதனால் நமரெனக் கோல்கோ டாது
பிறரெனக் குணங் கொல்லாது
ஞாயிற் றன்ன வெந்திற லாண்மையுந்
திங்க ளன்ன தண்பெருஞ் சாயலும்
வானத் தன்ன வண்மையு மூன்றும்
உடையை யாகி யில்லோர் கையற
நீநீடு வாழிய நெடுந்தகை......” (55)

இறந்த ஒருவரைக் குறித்து அவரது குணநலத்தை யெல்லாம் எடுத்துப் பாராட்டிப் பாடும் வகைக்கு ஆங்கிலத்தில் Elegy என்று பெயர். நந்தம் தமிழ் மொழியிலும் அதைப்போன்ற பாக்கள் உண்டு. காஞ்சித்திணையில் வரும் மன்னைக்காஞ்சி, கையறுநிலை போன்ற துறைகளுள் பாடப்படும் செய்யுட்கள் ஆங்கிலத்திலுள்ள Elegy என்ற

23. தொல் : செய்யுளியல். 114

வகையினை ஒத்துள்ளன. 'இன்னன் என்று இரங்கிய மன்னை யானும்'.[24] என்ற சூத்திரத்திற்கு உரை கூறப்போந்த நச்சினார்க்கினியர் "ஒருவன் இறந்துழி அவன் இத்தன்மையோனென்று ஏனையோர் இரங்கிய கழிவு பொருட்கண் வந்த மன்னைக்காஞ்சியானும்; இது பலவற்றின் நிலையாமை கூறி இரங்குதலின் மன்னைக்காஞ்சியென வேறு பெயர் கொடுத்தார். இது பெரும்பான்மை மன் என்ற இடைச்சொற் பற்றியே வருமென்றற்கு மன் கூறினார்" எனக் கூறுவதைக் காண்க. அதியமான் நெடுமானஞ்சியை ஒளவையார் பாடிய பாடல் இத் துறைக்கு எடுத்துக்காட்டாக விளங்குகின்றது.

"சிறியகட் பெறினே யெமக்கீயு மன்னே
பெரியகட் பெறினே
யாம்பாடத் தான்மகிழ்ந் துண்ணு மன்னே......
.........................
அருந்தலை யிரும்பாண ரகன்மண்டைத் துளையுரீஇ
யிரப்போர் கையுளும் போகிப்
புரப்போர் புன்கண் பாவை சோர
அஞ்சொ னுண் டேர்ச்சிப் புலவர் நாவிற்
சென்றுவீழ்ந் தன்றவன்
அருநிறத் தியங்கிய வேலே
ஆசா கெந்தை யாண்டுளன் கொல்லோ
இனிப், பாடுநரு மில்லைப் பாடுநர்க்கொன் றீகுநரு மில்லை..."

(235)

"அதியமான் சிறிய அளவினையுடைய மதுவைப் பெற்றால் அதை எங்களுக்குத் தருவான்; அது கழிந்தது! பெரிய அளவினையுடைய மதுவைப் பெற்றாலும் அதனை முதலில் எங்களுக்கு அளித்து, பின்னர் எஞ்சியதைத் தான்

24. தொல்—புறத்திணையியல்—24

நுகர்வான்; அது கழிந்தது! அவனது மார்பில் தைத்தவேல், அரிய தலைமையையுடைய பெரிய பாணர் தம் கையுள் வைத்துள்ள பாத்திரத்தின் துளையையுருவி, இரப்பவர் கைகளையும் தைத்துருவித், தன்னால் புரக்கப்படும் சுற்றத் தாரது புல்லிய கண்ணிற் பாவை ஒளி மழுங்க, அழகிய சொல்லை ஆராயும் ஆராய்ச்சியையுடைய அறிவினையுடையோர் நாவின்கண்ணே போய் வீழ்ந்தது. எமக்குப் பற்றாகிய எம் இறைவன் எவ்விடத்துள்ளான் கொல்லோ? இனிப் பாடு வாருமில்லை; பாடுவார்க்கு ஒன்றீவாருமில்லை" என்பது இதன் பொருள்.

மேனாட்டு ஆசிரியர் தனிநிலைச் செய்யுள் வகையுள் 14 வரிகளுள் அடங்கப்பெறும் செய்யுளினை Sonnet என்பர். எட்டுத்தொகையுள் நற்றிணை, குறுந்தொகை, பரிபாடல், ஐங்குறுநூறு, அகநானூறு ஆகிய இவைகளின் அடிப்பெருமையும் சிறுமையும் குறிப்பிடப்பட்டுள்ளன. ஆனால், புறநானூற்றில் வந்துள்ள செய்யுட்களின் அடியின் சிற்றெல்லையும் பேரெல்லையும் புலப்படவில்லை. புறநானூற்றைப் பதிப்பித்த, மகாமகோபாத்தியாய டாக்டர் உ. வே. சாமிநாத ஐயர் அவர்கள் அந்நூல் முன்னுரையில் "இந்நூலிலுள்ள பாக்களினுடைய அடிகளின் சிறுமை பெருமையும் தெரியவில்லை" எனக் கூறுவதைக் காண்க. ஆங்கிலத்திலுள்ள Sonnets என்ற வகையைப் போலவே திரு. வி. கோ. சூரியநாராயண சாஸ்திரியார் அவர்கள் "தனிப்பாசுரத் தொகை" என்ற 14 அடிகளுள்ள செய்யுட்களைக் கொண்ட ஒரு நூல் இயற்றியுள்ளனர். இதனை டாக்டர் போப் (Pope) என்பவர் ஆங்கிலத்திலும் மொழிபெயர்த்துள்ளனர்.

பாக்களிற் காணும் சுவைகளை மேனாட்டு ஆசிரியர் Satire, Humour, Pathos எனப் பல வகையாகப் பிரித்

துள்ளனர். தமிழில் Satire என்பதனை அங்கதம் என்றும் Humour என்பதனை நகைச்சுவை என்றும் Pathos என்பதனை அவலச்சுவை யென்றும் வழங்குவர். ஆங்கிலத்தில் கூறும் Satire என்ற சுவையினைத் தொல்காப்பியர் கூறும் அங்கதம் என்பதனோடு ஒப்பிடலாம். இதனை எமது ஆசிரியப் பெருந்தகை மகாமகோபாத்தியாய, பண்டிதமணி மு. கதிரேசச் செட்டியார் அவர்கள் "சங்ககாலத்து அங்கதம்" என்ற கட்டுரையில் அழகாக விளக்கியுள்ளனர். அங்கதம் என்பது வசை. அதாவது ஒருவருடைய குற்றத்தினைக் குறிப்பினாலாவது வெளிப்படையாலாவது எடுத்துக் கூறுதல். அவ்வாறு கூறுங்கால் நகைச்சுவை தோன்றக் கூறுதல் இன்பம் பயப்பதாகும். "வசையொடும் நகையொடும் புணர்ந்தன்றாயின் அங்கதச் செய்யு ளென்மனார் புலவர்"[25] என்ற நூற்பாவின் விசேடவுரையில் பேராசிரியர் "இல்லாதன சொல்லி நகைப் பொருட்டாகச் செய்யினும் அங்கதச் செய்யுள் எனப்படும்" என்பர். மாங்குடிகிழார் என்ற புலவர் பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனைப் பற்றிப் பாடும்போது அவனது பகைவர்களின் வன்மையற்ற நிலையாகிய வசையினை எடுத்துக் கூறுகின்றார். "வேந்தே! செருக்கு மிக்க நின் பகைவர் உன்னோடு போர் செய்வதற்கு இயலாதவராயினும், உனக்குப் பகைவர் என்ற பெயரினைப் பெற்றதாலும், நின்பால் போரில் தோற்றுத் தேவலோகம் சென்றதாலும், அவர்கள் மிக்க தவஞ் செய்தவராவர்" எனப் புலவர் கூறுவதைக் காண்க.

"நோற்றோர் மன்றநின் பகைவர் நின்னொடு
மாற்றா ரென்னும் பெயர்பெற்
றாற்றா ராயினு மாண்டுவாழ் வோரே" (26)

25. தொல் - செய்யுளியல், 129.

ஈண்டு, செருக்குற்றுப் போருக்கு வந்த பகைவரின் வன்மையற்ற நிலையாகிய வசையினைக் கூறவந்த புலவர் " நோற்றோர் மன்ற " எனப் புகழ்வது போலப் பழித்தமை காண்க. புறநானூற்றில் " நீயே அமர்காணின் " (167) " இவ்வே, பீலியணிந்து " (95) என்ற இவ்விரு பாக்களும் அங்கதத்தினை விளக்கச் சிறந்த எடுத்துக்காட்டாக விளங்கு.

நாவான் நுகரப்படும் அறுவகைச் சுவையினும் செவியான் நுகரப்படும் சொற்சுவை பொருட்சுவைகளே என்றும் இன்பம் பயப்பனவாய் விளங்குகின்றன. " நகையே அழுகை "[26] என்ற நூற்பாவில் ஆசிரியர் தொல்காப்பியனார் நகை, அழுகை, இளிவரல், மருட்கை, அச்சம், பெருமிதம், வெகுளி, உவகை எனப் பொருட் சுவை எட்டுவகையாகும் என்பர். இவைகளை முறையே ஹாஸ்யம், சோகம், ஜுகுப்ஸை, விஸ்மயம், பயம், வீரம், ரௌத்ரம், சிருங்காரம் எனக் கூறுவர் வடநூலார். நாடக நூலாசிரியர் இந்த எட்டுவகைச் சுவையுடன் சமநிலை ஒன்றுகூட்டிச் சுவை ஒன்பதென்பர். சமநிலையினைத் தொல்காப்பியர் இந்த எட்டுடன் சேர்த்துக் கூறாமைக்குப் பேராசிரியர் கீழ்க்கண்ட காரணம் கூறுவர். " அதற்கு ஓர் விகாரமின்மையின் ஈண்டுக் கூறியதிலன் என்பது; அதற்கு விகாரமுண்டெனின் முன்னை எட்டனுள்ளுஞ் சார்த்திக் கொள்ளப்படும்; அல்லதூஉம் அஃதுலகியல் நீங்கினார் பெற்றியாகலின், ஈண்டு உலக வழக்கினுட் சொல்லியதில னென்பது "[27] ஆதலால் முதலிற் கூறிய எட்டுவகைச் சுவையே காப்பியங்களில் பயின்று வருவன

26. தொல் - மெய்ப்பாட்டியல், 3.
27. தொல் : மெய்ப்பாட்டியல் - சூ - 3 உரை.

வாகும். இச் சுவைகளுக்கு எடுத்துக்காட்டாக, புறநானூற்றி லுள்ள சில செய்யுட்களைக் காண்போம். இணைப்பொருநன் ஒருவன் தன் சுற்றத்தாரோடு ஒரு வள்ளலிடம் செல்ல அவ்வள்ளல் அவர்களுக்குச் சிறந்த அணிகலன்களை அளிக்க, அவர்கள் அவைகளை அணிந்துகொள்ளும் முறை தெரியாது விரலில் அணிதற்குரிய அணிகலன்களைக் காதிலும் காதில் செறித்தற்குரியவைகளை விரலிலும் செறித்துக் கொண்டனர். இச் செய்கையினைப் புலவர், சீதையின் அணிகலன்களைக் கண்டெடுத்த குரங்குகள் அவைகளை அணிந்து கொள்ளும் முறை தெரியாது அணிந்துகொண்ட மைக்கு ஒப்பிடுகின்றார் :

" விரற்செறி மரபின செவித்தொடக் குநருஞ்
செவித்தொடர் மரபின விரற்செறிக் குநரும்

கடுந்தேர் இராம னுடன்புணர் சீதையை
வலித்தகை யரக்கன் வௌவிய ஞான்றை
நிலஞ்சேர் மதாணி கண்ட குரங்கின்
செம்முகப் பெருங்கிளை யிழைப்பொலிந் தாஅங்
கறாஅ வருநகை யினிதுபெற் றிகுமே." (378)

இச் செய்யுளில் பிறர் பேதைமை காரணமாகத் தோன் றும் நகைச்சுவை வந்துள்ளதைக் காண்க. முன்பு பிறிதோர் இடத்தில் காட்டிய மன்னைக்காஞ்சித் துறையில் வந்துள்ள " சிறியகட் பெறினே யெமக்கீயு மன்னே " என்ற செய்யு ளினை இழவு காரணமாகத் தோன்றிய அழுகைச் சுவைக்கு எடுத்துக்காட்டாகக் கொள்க.

" கோல்கா லாகக் குறும்பல வொதுங்கி
நூல்விரித் தன்ன கதுப்பினள் கண்துயின்று
முன்றிற் போகா முதிர்வினள் யாயும்." (159)

இதில் மூப்புக் காரணமாகப் பிறந்த இளிவரல் சுவையினைக் காணலாம்.

"கிண்கிணி களைந்தகால் ஒண்கழல் தொட்டு
......................................
குறுந்தொடி கழித்தகைச் சாபம் பற்றி." (77)

என்பது சிறுமை காரணமாகப் பிறந்த மருட்கைக்கு உதாரணமாகும்.

"அணங்குடை நெடுங்கோட் டளையகம் முனைஇ
முணங்குநிமிர் வயமான்" (52)

என்ற வரிகளில் அணங்கும் விலங்கும் பொருளாக அச்சம் பிறத்தலைக் காண்கிறோம்.

"தன்னகம் புக்க குறுநடைப் புறவின்
தபுதிகண் டஞ்சிச் சீரை புக்க
வரையா ஈகை உரவோன் மருக" (43)

என்பதும்,

"உறுதுப் பஞ்சா துடல்சினஞ் செருக்கிச்
சிறுசொற் சொல்லிய சினங்கெழு வேந்தரை" (72)

என்பதும் முறையே கொடையான் வந்த பெருமிதத்திற்கும் கொலையான் வந்த வெகுளிக்கும் உதாரணங்களாகும். புணர்ச்சி பொருளாகவும் விளையாட்டுப் பொருளாகவும் பிறக்கும் உவகைச் சுவைக்கு அடியிற்காணும் வரிகள் சிறந்த சான்றுகளாம் :

"கைம்மான் வேட்டுவன் கனைதுயின் மடிந்தெனப்
பார்வை மடப்பிணை தழீஇப் பிறிதோர்
தீர்தொழிற் றனிக்கலை திளைத்துவிளை யாட
இன்புறு புணர்நிலை" (320)

தமிழ் இலக்கியத்தில் அகப்பொருள் நூல்களில் காணக் கிடக்கும் உள்ளுறையுவமம் மிக்க இன்பம் பயப்பதாகும். அகப்பொருள் நூல்களின் உரையாசிரியர், பாக்களில் பற்பல இடங்களிற் காணும் உள்ளுறையுவமத்தினையும், இறைச்சிப் பொருளினையும் விளக்கிச் செல்வர். இவைகள் வடமொழி யாளர் கூறும் 'தொனி' என்பதனை ஒத்துள்ளன என்பர்.[28] இவ்வுள்ளுறையுவமம் பெரும்பாலும் அகப்பொருளுக்கே உரியதாயினும் சிற்சில இடங்களில் இது புறப்பொருளினும் வரும். "தோழியும் செவிலியும்"[29] என்ற தொல்காப்பியச் சூத்திரத்தின் விசேடவுரையில் "மற்றிவையெல்லாம் அகப் பொருட்கே உரியவாக விதந்தோதியதென்னை? புறப் பொருட்கு வாராதன போலவெனின், ஆண்டுவருதல் அரி தாகலின் இவ்வாறு அகத்திற்கே கூறினனென்பது" எனப் பேராசிரியர் கூறுதல் காண்க. புறநானூற்றின் முதல் 266 செய்யுள்களுக்கே உரை கிடைத்துள்ளது. இதன் உரையா சிரியர் இன்னார் எனத் தெரியவில்லை. இந்நூலின் உரையா சிரியர் பாக்களின் பொழிப்புரை, வினைமுடிபு, இலக்கணக் குறிப்பு முதலியன கூறுவதுடன் சில பாக்களில் மிக அருமை யாகத் தோன்றும் குறிப்புப் பொருளையும் எடுத்துக் காட்டி யுள்ளனர். பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற

---

28. "இத்தொனி வகைகளெல்லாம் அகப்பாட்டும் புறப்பாட்டு மாகிய சங்கமருவிய நூல்களிலும் பிறசான்றோர் செய்யுட்களிலும் இடையிடையே விரவிவரப் பெறுவன. இவை பெரும்பாலும் இறைச்சிப் பொருள்பற்றியும், திருப்பாவை, திருவிருத்தம், திருவாய் மொழி முதலிய திவ்யப் பிரபந்தங்களில் ஸ்வாபதேசப் பொருள்பற்றி யும் மற்றும் கவி கருதிய வேறு பல உள்ளுறை பொருள்பற்றியும் வருவன" (செந்தமிழ் - தொகுதி 10 - பக்கம் 266.)

29. தொல் - உவமவியல் - 31

நெடுஞ்செழியனை, கல்லாடனார் பாடிய பாட்டுள் இக் குறிப்புப் பொருள் காணக்கிடக்கின்றது.

" ஞால நெளிய ஈண்டிய வியன்படை
யாலங் கானத் தமர்கடந் தட்ட
கால முன்பநிற் கண்டனென் வருவல்
அறுமருப் பெழிற்கலை புலிப்பாற் பட்டெனச்
சிறுமறி தழீஇய தெறிநடை மடப்பிணை
பூளை நீடிய வெருவரு பறந்தலை
வேளை வெண்பூக் கறிக்கும்
லத்த மாகிய காடே " (புறம் - 23)

'தலையாலங்கானத்தில் போர்வென்ற, காலன்போலும் வலிமை யுடையோய்! யான் நின்னைக் கண்டேனாய் வந்தேன். வந்த வழியோ ஆண்மான் புலியால் கொல்லப்பட, பெண் மான் தன்னுடைய குட்டியை அணைத்துக்கொண்டு வேளை என்ற பூவைத் தின்னும் ஆளற்ற அருஞ்சுரமாகிய காட்டுவழி' என்பது இதன் பொருள். இவ்வரிகளில் "கலை புலிப்பாற் பட்டெனச் சிறுமறி தழீஇய மடப்பிணை பறந்தலை வேளை வெண் பூக்கறிக்குமென்பது, அவன் பகைவரைக் கொன்றவழி, அவர் பெண்டிர் தம் இளம் புதல்வரை ஓம்புதற்பொருட்டு இறந்து படாது அடகுதின்று உயிர் வாழ்கின்றாரென்பதோர் பொருள் தோன்ற நின்றது" என உரையாசிரியர் கூறுவதைக் காண்க.

இதுகாறும் கூறியவற்றால், இலக்கியத்தின் இலக்கணம் இன்னதென்பதும், அதனுள் அடங்கப் பெறும் நூல்கள் யாவை என்பதும், இலக்கியப் பண்புகள் எவை என்பதும், புறநானூற்றில் காணும் செய்யுட்கள் அவ்வித இலக்கியப் பண்புகளுக்கு எம்முறையில் சான்றாக விளங்குகின்றன என் பதும், செய்யுளின் இலக்கணம் இன்னதென்பதும், ஆங்கில இலக்கியத்திற் காணும் செய்யுள் வகைக்கும் நந்தம் தமிழிலக்

கியத்திற் காணும் செய்யுள் வகைக்கும் உள்ள ஒப்புமை இன்னதென்பதும், தொல்காப்பியங் கூறும் எண்வகைச் சுவைக்கும் புறநானூற்றில் எடுத்துக்காட்டுகள் உள்ளன என்பதும், புறநானூற்று உரையாசிரியர் சிற்சில பாக்களில் மிக அரிதாகக் காணும் குறிப்புப் பொருளை விளக்கியுள்ளனர் என்பதும் ஒருவாறு சுருக்கமாக விளக்கப்பட்டன. மேனாட்டு இலக்கியத்தில் செய்யுள், உரைநடை, நாடகம் ஆகிய ஒவ்வொரு பகுதிக்கும் பல ஆராய்ச்சி நூல்கள் (Literary Criticism) வெளிவந்துள்ளன. நந்தம் தமிழ் மொழியிலோ வெனில் அத்தகைய நூல்கள் மிகச் சிலவே உள்ளன. ஆங்கில இலக்கியத்தின் பொதுத் தன்மையினையும் சிறப்புத் தன்மையினையும் விளக்க "An Introduction to Study of Literature" என்ற ஒரு நூல் W. H. Hudson என்பவரால் எழுதப்பட்டுள்ளது. Moulton என்பவர் "The Modern Study of Literature" என்ற ஒரு நூல் வெளியிட்டுள்ளனர். இதுபோன்ற இலக்கியத்தின் சிறப்புத் தன்மையினை விளக்கும் ஆராய்ச்சி நூல் பல ஆங்கில மொழியில் எழுதப்பட்டுள்ளன. இனி, தமிழ் மொழியில் தமிழ் இலக்கியத்தின் ஆராய்ச்சியைப் பற்றிய நூல்கள் பல வெளிவருதல் வேண்டும். தமிழ் இலக்கியத்தின் சிறப்பினைப் பற்றி ஆங்கிலத்திலும் நூல்கள் வெளியிடல் வேண்டும். மேனாட்டார் பலர் தமிழிலுள்ள இலக்கியச் சுவையினை அறியாதிருக்கின்றனர். எனவே தமிழ் நலம் அவாவிய தமிழ்ப் பேரறிஞர் தமிழ் இலக்கியத்தின் சிறப்பினைப் பற்றித் தமிழ்மொழியிலும் பிற மொழியிலும் நூல்கள் இயற்றித் தமிழன்னைக்குப் பல புதிய அணிகலன்கள் சூட்டி மகிழ்வாராக.



